# பொருளடக்கம்

மலர் 19] செப்டம்பர் 1966 [இதழ் 3

ஹிஜ்ரீ 1386 ஜமாதுல் அவ்வல்





## அன்புள்ள ஆசிரியருக்கு,

அஸ்ஸலாமு அலைக்கும்!

மீலாத் மலர் கிடைத்தது. எல்லாப் பக்கங்களையும் சுவைத்துப்படித்தேன். சிறுகதைகளில் இழையோடிய சீர்திருத்தத் துடிப்பு கவர்ந்தது. கட்டுரைகளும் அற்புதம். எத்தனையோ நல்ல நல்ல எழுத்தாளர்கள் நம்மிடம் இருந்தும் நாள்போக்கில் எழுத்துத்துறைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு ஒதுங்கும் நிலைதான் இப்பொழுது உருவாகியிருக்கிறது. இதுதான் இஸ்லாமியத் தமிழ் இலக்கிய உலகின் தலைவிதி என்று எண்ணி ஏக்கப் பெருமூச்சுவிட வேண்டியிருக்கிறது.

ஒன்றிரண்டு முஸ்லிம் தமிழ்ப் பத்திரிகைகளாவது தமிழ் முஸ்லிம் பண்பாட்டை கொஞ்ச நஞ்சமாவது எடுத்துச்சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்ற எண்ணமோ துடிப்போ நம்மவர்களுக்குக் கிடையாது இதனால் முஸ்லிம் தமிழ்ப் பண்பாட்டின் அடிச்சுவடுகள் மெல்ல மெல்ல அழிந்து போகும். அதுதான் இந்தப் புறக்கணிப்புக்குக் கைமேல் கிடைக்கக் கூடிய பலனாக இருக்கும்.

மீலாத் மலரைப் படித்ததும் இந்த சிந்தனை தான் எனக்குத் தோன்றியது. கடந்த காலத்தில் எத்தனை பத்திரிகைகள் இருந்தன! எத்தனை வேகத்தில் முஸ்லிம் எழுத்தாளர்கள் போட்டி போட்டுக்கொண்டு எழுதினார்கள்? எல்லாம் கனவு! பழங்கதை! வேறென்ன சொல்ல முடியும்? முஸ்லிம் முரசின் பணி தொடரட்டும், தமிழ் முஸ்லிம் மக்களுக்குப் புதிய சிந்தனை பிறக்கும் என்று நம்புவோம்.

—ஜே. எம். சாலி, எம். ஏ.,
தமிழ் முரசு, சிங்கப்பூர்-12.




# தேர்தல் வாக்குறுதி!

பொதுத் தேர்தலில் வெற்றி பெறுவதற்காக ஒவ்வொரு அரசியல் கட்சியும் அமோகமான வாக்குறுதிகளை அள்ளி அள்ளி வீசுகின்றன.

பதவியில் இல்லாத கட்சிகளைவிடப் பதவியில் அமர்ந்துள்ள கட்சி, பலவித இனிப்பான ஆசைகளைக் காட்டி, இதைச் செய்யப் போகிறோம், அதைச் செய்யப் போகிறோம் என்று வெறும் வாயப் பந்தல் போடுகின்றது.

காமராஜர் இதற்கு ஒரு முன்மாதிரி! ஆனால் சாதாரண சாதனைகளையும் பெரிய காரியம்போல் பேசுகின்றார்! அடுத்து வரும் ஆண்டுகளில் இந்த மாநில மக்களுக்குக் கல்லூரி வரையில் இலவசக்கல்வி அளிக்கத் தாம் விரும்புவதாக திருச்சி அரசியல் மாநாட்டில் அறிவித்துள்ளார்.

இது உண்மையில் ஒரு பெரிய சாதனையல்ல ரஷ்யா முதலிய வளரும் நாடுகளில் உயர்தரக் கல்வி இலவசமாக அளிக்கப் படுகின்றது.

இப்போதே, நூற்றுக்கு ஐம்பது கல்லூரி மாணவர்கள் அரசாங்கத்தின் உதவிச் சம்பளம் பெற்று நம் நாட்டில் படித்து வருகின்றனர். வளரும் நாட்டில் இதுஒரு பெரிய சாதனையன்று. படித்துவிட்டு வேலை வாய்ப்பு இல்லாமல் இருப்பவர்களுக்கு முதலில் வேலை தேடித் தர வேண்டியது ஒரு சோஷலிஸ நாட்டின் முதற் கடமையாகும். சோஷலிஸத்தின் தந்தையெனப் பாராட்டப்படும் காமராஜர் இதனை முதலில் செய்ய வேண்டும்.

மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள் நடந்து முடிந்த பின்பும் வேலையில்லாத மக்களின் கூட்டம் பெருகிக் கொண்டுதான் இருக்கிறது ஐந்தாண்டுத் திட்டங்களின் அடிப்படையே வேலை வாய்ப்பும் ஊதிய உயர்வுமாகும். இவையிரண்டும் கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களால் நிறைவேறவில்லை

"முதல் ஐந்தாண்டுத் திட்டம் அதிருப்திகரமாக இல்லை", இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் 'ஓரளவு திருப்திகரம்', மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டம் 'நன்றாயில்லை' என்று எதிர்க் கட்சிகள் கூறவில்லை; அரசாங்கத்தின் திட்டக்கமிஷன் அறிக்கையே கூறுகின்றது!

எதிர்க்கட்சிகளிடம் கொள்கையில்லை, திட்டமில்லை என்று கூறினால்மட்டும் காங்கிரஸுக்கு ஓட்டுகள் குவிந்துவிடா.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தோல்வியே காங்ரஸுக் குப் பெருங் களங்கமாகும்.




## சரிந்தது சட்டம்!

படுதோல்வியடைந்த தங்கக் கட்டுப்பாடு 14 காரட் சட்டத்தை அரசாங்கம் ரத்து செய்து விட்டது. முன் யோசனையின்றி சர்வாதிகாரப் போக்கில் அரசாங்கம் செய்த சட்டங்களில் இதுவும் ஒன்று. இதனால் லட்சக்கணக்கான பொற்கொல்லர்கள் வேலை இழந்து தவித்து, வாழ்விழந்த மாண்டது தான் மிச்சம். இச் சட்டத்தினால் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை. காலங்கடந்தாவது அரசாங்கத்திற்கு புத்தி வந்ததே என்று மகிழ்ச்சியடைகின்றோம்.

## மீண்டும் ஒற்றுமை!

மலேசியா — இந்தோனேசியா எதிர்ப்புக்காரணமாக மலாயாவுக்கும் இந்தோனேசியாவுக்குமிடையே நெருக்கடி நிலைமை தோன்றியிருந்ததால், இருநாடுகளின் வியாபாரமும் பாதிக்கப் பட்டிருந்தன. மலாயாவும் இந்தோனேசியாவும் கலாசார ஒற்றுமையும், வியாபாரத் தொடர்பும் பெற்று, ஒரே தாயின் பிள்ளைகளைப் போல் இருந்தும், சீனக் கம்யூனிஸ்டுகளின் தலையீட்டினால் இரண்டு நாடுகளும் தங்களுக்குள் மோதிக்கொண்டிருந்தன. அதிபர் சுகர்ணாவின் அளவுக்கு மிஞ்சிய கம்யூனிஸ்ட் பக்தியே, இந்த இரண்டு சகோதர நாடுகளின் சண்டைக்கும் காரணம்.

சுகர்ணாவின் சர்வாதிகாரப் போக்கிற்கு இந்தோனேசியாவில் ஏற்பட்ட எதிர்ப்பின் காரணமாக அவருடைய செல்வாக்கு மறைந்து, ஜெனரல் சுகர்த்தோ என்ற இராணுவத் தளபதி உயர் பதவிக்கு வந்து விட்டார். இந்தோனேசியாவில் ஏற்பட்ட இந்த மாற்றத்தின் விளைவாக, இருநாடுகளும் சமாதான உடன்பாடு செய்து கொண்டிருப்பது பற்றி மகிழ்ச்சியடைகிறோம்.

## அமானி ஹஜ்ரத்!

லால்பேட்டை அரபிக் கல்லூரியின் தலைவர் அமானி ஹஜ்ரத் அவர்கள் கடந்த மாதம் காலமான செய்தியறிந்து வருந்துகிறோம். ஹஜ்ரத் அவர்களின் கல்வித் திறனும் பாடபோதனைச் சிறப்பும் அறிந்தவர்கள் அவர்களை மறக்கமுடியாது. அவர்களிடம் அரபிக்கல்வி பயின்றவர்கள் இதனை அன்புடன் நினைவுகூருகின்றனர்.

ஹஜ்ரத் அவர்கள் மார்க்கக் கல்வி போதிப்பதுடன் தமது கடமை முடிந்ததென்று இருந்து விடவில்லை. அரசியல் துறையிலும் பங்கு கொண்டு பணியாற்றினார். காங்கிரஸ் நடத்திய கிலாபத் இயக்கத்தில் தீவிரப் பங்கேற்று இந்திய முஸ்லிம்களுக்கு நாட்டுப் பற்றும் சமூகப் பற்றும் உண்டாகுமாறு தொண்டாற்றினார். இறக்கும் வரையில் முஸ்லிம் லீகின் முக்கியத் தலைவராக விளங்கினார்.

முற்போக்கு நோக்குள்ள அமானி ஹஜ்ரத் அவர்கள் நபிகள் பெருமானார் (சல்-அம்) அவர்களின் வாழ்க்கையை உருதுவில் இனிய காவியமாக இயற்றியுள்ளார். அரபி, பார்ஸி, உருது ஆகிய மொழிகளில் நல்ல புலமை பெற்று விளங்கிய ஹஜ்ரத் அமானி அவர்களின் பணி ஈடு செய்ய முடியாததாகும். அவர்களின் ஆன்மாவுக்கு வல்ல இறைவன் சாந்தியும் சமாதானமும் அளித்தருள்வானாக, ஆமீன்!




"திப்பு"

காயிதெ மில்லத் ஹாஜி முஹம்மது இஸ்மாயீல் சாஹிப் எம். பி. அவர்களும் ஏ. கே. ஏ. அப்துஸ் ஸமது எம். பி. அவர்களும் அண்மையில் திருக் குர்ஆன் மகாநாட்டிற்காக சிங்கப்பூர் சென்றபோது விமான நிலையத்தில் ஏராளமான மக்களின் கூட்டம்வெள்ளம்போல் திரண்டு வந்து வரவேற்றது. நகரப் பிரமுகர்கள் தலைவருக்கு மலைபோல் மாலைகள் அணிவித்து மகிழ்ந்தனர். திருக் குர்ஆன் மாநாட்டுக்குத் திறப்பு விழா உரை நிகழ்த்திய சிங்கப்பூர் பிரதமர் லீ குவான் யூ அவர்களுக்கு சிங்கை முஸ்லிம்களின் சார்பாக ஆங்கிலத் திருக் குர்ஆன் பிரதியொன்று அன்பளிப்பாக வழங்கப் பெற்றது.

காயிதெ மில்லத் அவர்கள் மலேசியாவின் தலைநகரான கோலாலம்பூரிலும், மற்றும் பல மலேசியா நகரங்களிலும் மகத்தான வரவேற்பு அளிக்கப் பெற்றார். சிங்கப்பூரிலும், மலேசிய நகரங்களிலும் தலைவருக்கு முஸ்லிம்கள் மட்டுமின்றி, ஏனைய திராவிடப் பெருங்குடி மக்களும் உற்சாகமான வரவேற்புக் கூட்டங்கள் நடத்தி மகிழ்ந்தது குறிப்டத் தக்கதாகும்.

கோலாலம்பூர், சிரம்பான், கோலகிள்ளான், கிள்ளான், தெலுக்கான்சன், தாப்பா, பாரிட் புந்தார், தைப்பிங், ஈப்போ, கோலகங்சார், அலோர் ஸ்டார், சுங்கைப்பட்டாணி, பினாங்கு ஆகிய முக்கிய நகரங்களில் தலைவர்களுக்கு அளிக்கப்



30—7—66ல் பினாங் E & O. ஹோட்டில் நடந்த பெருவிருந்தின் போது வரவேற்புக் குழு செயலாளர் ஜனாப் ஜே. எம். ஹனீசன் பீ. வரவேற்புரை நிகழ்த்த, ஜனாப் எம். ஏ. சத்த மாலை அணிவிக்கிறார். பினாங்கு பெருவணி ஜனாப் கே. எஸ். எம். இஸ்மாயீல் ஹாஜிய காயிதெ மில்லத்துடன் அளவளாவுகிறார்.

1. தலைவருக்கு வரவேற்புரை வழங்குகிறார் தாவூது ரெஸ்டாரண்ட் மானேஜிங் பார்ட்னர் யூசுப். 2. தமது கரங்களால் தலைவருக்கு உணவு பரிமாறுகிறார். 3. தலைவரை வரவேற்றுப் பேசுகிறார். 4. மாலையணிவிக்கின்றார். 5. தலைவர் தமக்கு அளித்த வரவேற்பு விருந்திற்கு நன்றி கூறுகிறார். 6. அப்துஸ் ஸமது எம். பி.யும், இத்ரீஸ் ஜே. பி.யும் கவனிக்கின்றனர்.









பட்ட வரவேற்பில், சாதி, மத வேற்றுமையின்றி, தமிழர்கள் அனைவரும் உற்சாகமாகப் பங்கு கொண்டது மறக்க முடியாத நிகழ்ச்சியாகும். இதற்கு முன் எப்போதுமே கண்டிராத கண் ஞர்த காட்சி என்பதில் ஐய மில்லை. மன்னர்களும் பார்த்துப் பொருமைப் படும்படியான மகத்தான வரவேற்புகள்!

பினங்கில் காயிதெ மில்லத்தை வரவேற்பதற்காக எஸ் எம். எம். இத்ரீஸ் ஜே. பி. அவர்களின் தலைமையில் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டு, அதன் செயலாளராக ஜே. எம். ஹுஸைன் பி ஏ யும், பொருளாளராக தாவூத் ரெஸ்டாரண்டு எம். என். எம் யூசுப் அவர்களும் இருந்து வரவேற்பு விழாவை மிகச் சிறப்பாக நடத்தினர்.

பினங்கு தாவூத் ரெஸ்டாரண்ட் உரிமையாளர்களான எம். என் எம். யூசுப், சையித் அலியார் பி ஏ. ஆகியோரும் ரெஸ்டாரண்டின் ஊழியர்களும் சேர்ந்து காயிதெமில்லத்துக்கும் அப்துஸ் ஸமது எம். பி.க்கும் சிறப்பான, சுவையான விருந்தொன்று நடத்தினர். இதில் நகரப்பிரமுகர்கள் பலரும் பங்கு கொண்டனர்.

தமது 71-வது வயதிலும் காயிதெ மில்லத் ஒரு இளைஞரைப்போல் உற்சாகமாகவும், சுறுசுறுப்பாகவும் குறுகிய காலத்தில் ஏராளமான வரவேற்புகளில் கலந்துகொண்டு மக்களை மகிழ்வித்தது மறக்க முடியாத நிகழ்ச்சியாகும். காயிதெ மில்லத் அவர்களின் மலேயா சுற்றுப் பயணத்தின் நினைவாக எடுத்த உருவப் படமே இந்த இதழின் அட்டையில் காணப்படுகிறது. படம் அனுப்பியவர்: எம். எஸ் அலியார், பி.ஏ. பினங்கு.

"தென்னிந்திய கல்வி நிதி' (South Indian Educatianal Trust Women's College) எஸ். ஐ. ஈ. டி. 'மாதர் கல்லூரி' என்று சொல்லப்படும் பெண் கல்லூரியின் நிர்வாகக் குழுத் தலைவர் (Chairman) ஹாஜானி பாத்திமா அக்தார் கல்லூரி ஸ்தாபகர் ஜஸ்டிஸ் பஷீர் அஹ்மத் சயீத் அவர்களின் மனைவி அவர்களை நமது ஆசிரியர் கண்டு பேசியபோது நிகழ்ந்த உரையாடல்:

# எஸ். ஐ. ஈ. டி.

# பெண்கள் கல்லூரி



தலைவர் பாத்திமா அக்தார் அவர்களை நான் சந்தித்தபோது புதிய மாணவர்களை கல்லூரியில் சேர்க்கும் காலம் முடிந்து விட்டது. எனினும் பெரிய இடத்துச் சிபாரிசுகளின் மீது பல பெற்றோர்கள் வந்துகொண்டே இருந்தனர். பெண்களின் கல்லூரியிலும் இடநெருக்கடிதான் என்பதைக் கண்டுகொண்டேன். பத்து வருடத்துக்கு முன்பு இந்த நிலையை எதிர்பார்த்திருக்க முடியாது. ஏன், இரண்டு ஆண்டுகளுக்கு முன்புகூட யாரும் இந்த நெருக்கடியைஎதிர்பார்க்கவில்லை என்பது அப்போது பிரின்சிபால் அறையில் நிகழ்ந்த உரையாடல் ஒன்றின் மூலம் தெரிய வந்தது.

"இந்த மாணவியைச் சேர்த்துக்கொள்ளும்படி மந்திரி கூறுகிறார்" என்று தொலைபேசியில் யாரோ ஒருவர் பேசியபோது, தலைவர் உண்மையில் கோபமுற்று, "மந்திரி கூறுகிறார் (Minister is interested)என்று கூறி, மாணவிகளைக் கல்லூரியில் சேர்த்த காலமெல்லாம்மலையேறி விட்டது" என்றார்! அதாவது கல்லூரியில் இட நெருக்கடி அதிகம்.

பெண் கல்விக்கு ஒரு புதிய சகாப்தமே தோன்றியுள்ளது என்பதில் சந்தேகமில்லை.

தலைவர் தமது அலுவலக வேலைகளை முடித்துக் கொண்ட பின், நான் வந்த காரியத்தை விசாரித்தார். நான் சில கேள்விகள் கேட்கத் துவங்கினேன்:

"எஸ். ஐ. ஈ. டி. பெண்கள் கல்லூரி முஸ்லிம்களின் முன்னேற்றத்திற்காக நிறுவப்பட்டது உண்மையல்லவா?"

ஆம். முஸ்லிம் பெண்களின் கல்வி வளர்ச்சிக்காக நிறுவப் பட்டதுதான் இக்கல்லூரி. ஆனால் முஸ்லிம்கள் மட்டுமே அதில் படிக்கவேண்டும் என்பது சரியல்ல. முஸ்லிம்களின் முயற்சியாலும், பெரும்பான்மை அவர்களின் பணத்தினாலும் இக் கல்லூரி கட்டப்பட்டதாயினும் பொதுவாக எல்லா சமய சமூகப் பெண்களும் சேர்ந்து படிக்க வேண்டுமென்பதே நியாயம். முஸ்லிம்கள் மட்டுமே படித்தால் வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்ட முடியாது. ஆனால் கல்லூரியின் நிர்வாகக் குழுவில் முஸ்லிம்களே இருக்கின்றனர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் இதன் பிரதிநிதியாக இருப்பவரும் ஒரு முஸ்லிமே, இம்மாதிரி அநேக கிறிஸ்துவக் கல்லூரிகள் இந்தியாவில் இருக்கின்றன.

தென்னாட்டில் முஸ்லிம்களால் நிறுவப்பெற்ற முதல் பெண் கல்லூரி இது ஒன்றுதான்.

முஸ்லிம்களைப் போன்ற சிறுபான்மை சமூகத்திற்காக மட்டுமே நிறுவப்படும் எந்தக் கல்லூரியும், பொருளாதார ரீதியிலும், கல்வி அடிப்படையிலும் வெற்றிகரமாக நடக்க முடியாது.

"உங்கள் கல்லூரியில் படிக்கின்ற பெண்களில் நூற்றுக்கு எத்தனைப் பேர் முஸ்லிம் பெண்கள்?"

முஸ்லிம்கள் சிறுபான்மை சமூகத்தினராகவும், கல்வித்துறையில் நீண்டகாலமாகப் பின்தங்கியவர்களாகவும் இருப்பதால் அவர்கள் பிற சமூகப் பெண்களைவிடக் குறைவாகத்தான் இருப்பார்கள் ஆனால் சென்னையில் வேறு எந்தப் பெண்கல்லூரியிலும் படித்து வருகின்ற முஸ்லிம் பெண்களைக் காட்டிலும் அதிகமாகவே இதில் படிக்கின்றனர். இப்பொழுது முஸ்லிம் பெண்கள் அதிகமாக உயர்கல்வி பெற முன்வருகின்றனர். வெளியூர்களிலிருந்தும், சென்னையிலிருந்தும் ஏராளமான முஸ்லிம் பெண்கள் "நமது கல்லூரி" என்ற நினைப்புடன் படிக்க தைரியமாக இங்கே வருகின்றனர். பெண்களுக்கு இங்கே நல்ல பாதுகாப்பும் பத்திர உணர்ச்சியும் ஏற்படுவதால்தான் இப்படி வருகின்றனர்.

"ஆம். அப்படித்தான் நானும் கேள்விப்படுகிறேன். பெண்கள் இங்கே தகுந்த கண்காணிப்பிலும், பாதுகாப்பிலும் இருக்கின்றனர் என்று மக்கள் பேசிக்கொள்கின்றனர். நானும் பார்க்கிறேன். அந்நிய ஆண்கள் யாரும் நெருங்க முடியாதபடி தகுந்த பாதுகாப்பு இருக்கிறது. பெற்றோர்களுக்கு இது ஒரு பெரிய ஆறுதல்தான். போதுமான பாதுகாப்பு இல்லாமற் போகுமோ என்ற கவலையால் தானே பல முஸ்லிம் பெற்றோர்கள் தங்கள் பெண்களுக்கு மேற்படிப்பு அளிக்கத் தயங்குகின்றனர்" என்றேன்

"இக் கல்வி நிறுவனத்தினால் முஸ்லிம்களுக்கு என்ன பயன்?" என்று சிலர் கேட்பதை மனத்தில் வைத்துக்கொண்டு நான் கேட்டேன்:

"முஸ்லிம் பெண்களின் கல்வி வளர்ச்சிக்கு இந்த நிறுவனம் வேறு எந்த வகையில் உதவி செய்யமுடியும்?"

முஸ்லிம் இளைஞர்கள் கடந்த காலத்தில் கல்வித் துறையில் ஆர்வமில்லாமல் இருந்தனர். ஆனால் இன்று அவர்கள் அதிகமாக மேற்படிப்புப் பெற விரும்புகின்றனர். ஆனால் அவர்களுக்கு மற்றவர்களைப்போல் கல்லூரிகளில் இடநெருக்கடி! 10 வருடங்களுக்கு முன்பு இந்த நிலைமையை நாம் எதிர்பார்த்திருக்க முடியாது அல்லவா? இதேமாதிரி இன்னும் 10. ஆண்டுகளில் நம் பெண்களுக்குக் கல்லூரிகளில் இடநெருக்கடி ஏற்படலாம். அப்போது, இன்று முஸ்லிம் மாணவர்கள் கல்லூரிகளில் இடமின்றி தவிப்பதைப்போல், முஸ்லிம் மாணவிகள் இடம் கிடைக்காமல் தவிப்பார்கள்! அந்த நிலையில் முஸ்லிம் மாணவிகளுக்கு இதுபோன்ற கல்லூரிகளில் முதலிடம் (Preference) தரப்படும். அதற்குச் சட்டத்தில் இடம் உண்டு. அரசியல் சாசனம் 30-வது ஷரத்தின்படி சிறுபான்மையினர் தாங்கள் சமுதாய சமய முன்னேற்றத்திற்காகச் சொந்த நிறுவனங்களை

வைத்துக்கொள்ள உரிமை யுண்டு.

இதுபோன்ற வேறு பல சிறு பான்மைக் கிறிஸ்துவ சமூக நிறுவனங்கள் இருக்கின்றன. அவற்றில் பெரும்பான்மைச் சமூக மாணவர், மாணவிகளே அதிகமாய்ப் படிக்கின்றனர். நூற்றுக்கு 30 அல்லது 40 பேர்களே சிறுபான்மைச் சமூகத்தினரான கிறிஸ்துவர்கள், படிக்கின்றனர். ஆனால் அந்த நிறுவனத்தை ஏற்படுத்திய செலவுகள் அனைத்தும் அந்தச் சிறுபான்மைச் சமூகத்தையே சேர்ந்ததாகும் என்றார்.

''நமது பெண்களின் முன்னேற்றத்திற்காக தங்கள் கல்லூரியில் என்ன விசேட அம்சங்கள் இருக்கின்றன?''

அலீகர் முஸ்லிம் கல்லூரியில் கூட இல்லாத பல சிறப்பான அம்சங்கள் இங்கே இருக்கின்றன! இக் கல்லூரியின் 10 சிறப்பான அம்சங்களைப் பற்றி அவர் விளக்கிக் கூறினார்.

இக் கல்லூரியில் கட்டப்பெற்றுள்ள கல்லூரி அரங்கு மிகப் (AUDITORIUM) புதுமையானது அளவிலும் பெரியது நவீன சாதனங்களுடன் அமைந்தது பெண்களின் பலவகையான ஆற்றல்களையும் இங்கே பண்படுத்திக்கொள்ள முடியும்.

பெண்கள் உடல் நலத்தைப் பேணிக்காப்பதற்காக, நீச்சல் குளம் (Swimming Pool) ஒன்று இருக்கிறது. தேகப்பயிற்சிக்கு நீச்சல் சிறந்ததல்லவா? நமது பெண்கள் சுகாதாரத்திலும் தேகப்பயிற்சியிலும் மிகவும் பின்தங்கியவர்கள். சுவரை வைத்தே சித்திரம் வரைய வேண்டும் என்ற உண்மையைப் பெண்கள் மறந்து விடுகின்றனர்.

இந்த இடத்தில் இடைமறித்து ஒரு கேள்வி கேட்டேன். ''பெண் கல்லூரிக்கு நீச்சல் குளம் ஒன்று இலட்சக் கணக்கில் செலவிட்டுக் கட்டியது பற்றி முஸ்லிம்கள் பலர் குறைகூறுவது உங்களுக்குத் தெரியுமா?''

''ஆம், தெரியும். முஸ்லிம் பெண்களுக்கு மட்டும் சுகாதாரமும் உடல் நலமும் தேவையில்லை என்று அவர்கள் கருதுகிறார்கள் போலும்!'' என்று சற்றுக் கோபமாகவும், நகைச் சுவையுடனும் கூறினார். 'அறியாமையால் அப்படிக் கூறுகின்றனர் நீச்சல் குளம் என்றால் அதில் ஆண்கள் முன்னிலையில பெண்கள் மரியாதையின்றி உடையணிந்து குளிப்பார்கள் என்று சிலர் நினைக்கிறார்கள்போலும்! நீச்சல் குளத்தின் நாற்புறமும் மறைப்பு இருக்கிறது. ஆடவர் யாரும் பெண்கள் குளிக்கும்போது அங்கு வருவதில்லை. பெண்கள் குளிக்கும் போது அதற்காக ஒரு தனி யுடை இருக்கிறது மரியாதையான முறையில் அதை உடுத்திக் கொண்டு குளிக்க வேண்டுமென்ற சட்டதிட்டங்கள் எல்லாம் இருக்கின்றன. பெண்கள் அவர்களின் விருப்பம்போல் உடையணிய முடியாது இந்த சட்டதிட்டங்கள் எல்லாம் வெளியில் இருப்பவர்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டார்.

பெண்களுக்காக இரண்டு பெரிய ஹாஸ்டல் கட்டிடங்கள் இருக்கின்றன.

அழகான புல் வெளிப்பாதை ஒன்று விளையாடுவதற்காக அமைக்கப் பெற்றிருக்கிறது.

இப்படிப் பல சிறப்பான அமைப்புகள் பற்றிக் கூறிக் கொண்டே போனார் பேகம் சாஹிபா.

(அடுத்த இதழில் வரும்)

சங்கு ஹாஜி சய்யித் அப்துல் காதிர் அவர்களின் வாழ்க்கைத் துணைவி, ஹாஜானி பாத்திமா கனி பீவி அவர்கள் இந்த வருடம் மக்கா செல்லும் பாக்கியம் பெற்ற ஆயிரமாயிரம் தமிழக முஸ்லிம்களில் ஒருவர். அவர்களின் ஹஜ்ஜுப் பயண அனுபவங்களைப் பற்றி நமது நிருபர் கண்ட பேட்டியின் விபரம்:

# நான் கண்ட

# ஹஜ்ஜுப் பயணம்



பேட்டியளித்தவர்: ஹாஜானி பாத்திமா கனி பீவி
பேட்டி கண்டவர்: புலவர் ஆபிதீன்

**வீட்டிலேயே இருந்து பழகிய உங்களுக்கு ஹஜ்ஜுப் பயணம் எப்படி இருந்தது?**

வீட்டிலேயே இருந்து பழகியவளில்லை நான். குற்றாலம், ஏற்காடு, மதுரை, மதராஸ் முதலிய பல வெளியூர்களுக்குச் சென்றிருக்கிறேன். ஆனால் தாய்நாட்டை விட்டு வெளிநாடு சென்றது இதுதான் முதல் தடவை. தாயார், கணவர், அண்ணன் ஆகியோருடன் சென்றதால் இப் பயணம் எனக்கு மகிழ்ச்சியாகவே இருந்தது. மேலும் மார்க்கக் கடமைக்காகச் செல்கிறோம் என்ற எண்ணம் பெரிதும் மகிழ்ச்சி தருவதாகவே இருந்தது.

**உற்றார், உறவினரைப் பிரிந்து சென்ற உங்கள் உள்ளம் வேதனைப் பட்டதா?**

ஆம்; உற்றார் உறவினரைப் பிரிந்து சென்றது கொஞ்சம் கஷ்டமாகத் தானிருந்தது. குறிப்பாக என்னுடைய ஒரே மகனை (ஷேக் ஹமீது) தனியாக விட்டுச் செல்ல நேர்ந்ததுதான் மிகவும் கவலையாக இருந்தது. 12 வயதுக்குட்பட்டவர்களைத் தாய் தந்தையர் உடன் அழைத்துச் செல்லலாம்; 16 வயதுக்கு மேற்பட்டவர்களாய் இருந்தாலும் தனியாகவோ அழைத்தோ செல்லலாம். இது சட்ட வரம்பு. என்மகனோ, இந்த இரண்டு வயது வரம்பிற்கும் இடைப்பட்டவன். எனவே தான் அழைத்துச் செல்ல முடியவில்லை.

மகிழ்ச்சியான பயணமாக இருந்தும் எங்களைப் பல ஊர்களிலும்—வழி நெடுக வழியனுப்ப வந்தவர்கள் செய்த உபசரணைகள் என் மனத்தைக் குழப்பிவிட்டது. இதனால் எனக்கு அழுகையே வந்துவிட்டது!

**அரேபியாவில் சமையல் வேலைகளை எப்படி நடத்திக் கொண்டீர்கள்?**

நாங்களே தான் சமைத்துக் கொண்டோம். சுபுஹு தொழுதுவிட்டு 'தவ்வாப்' செய்து ஆனதும் வீட்டுற்குத் திரும்பும் வழியில் ''மார்க்கெட்'' சென்று காய்கறிச் சாமான்கள் வாங்கிவருவோம். மதிய உணவு மட்டுமே சமைத்துக் கொள்வோம்; இரவு உணவுக்கு அதையே வைத்துக்கொள்வோம். இங்கிருந்தே, புளி, பருப்பு, பப்படம் முதலியன எடுத்துச் சென்றோம். பப்படம், வற்றல் முதலியன எடுத்துச் செல்வது நல்லது. ஏனென்றால் இவற்றை விரைவில் சமைக்க முடியும்.விரைவில் சீரணிக்கக் கூடியவையும் கூட. நாங்கள் இறைச்சி சாப்பிடவே இல்லை. காரணம் அது கொழுப்புச் சத்துள்ளது. ஜீரணிக்க அதிக நேரம் ஆகும். பிஸ்கட், பிரட் ஆகியவைதாம் எங்கள் காலை ஆகாரம். அங்கே நாங்கள் உணவு வகையில் அதிகக் கவனம் செலுத்தவில்லை. தொழுகை முதலிய வணக்கங்களில்தான் பெரும்பாலும் ஈடுபட்டிருந்தோம். இரவு உறக்கம் 6 மணி நேரம் தான்.

**ஜமாஅத்துடன் சேர்ந்து தொழுதீர்களா? ஆணும் பெண்ணும் சேர்ந்து தொழுதீர்களா? பிரிந்தா? இமாம் (கூட்டுத் தொழுகையின் தலைவர்) ஆணா, பெண்ணா?**

இமாம் ஜமாஅத்துடனே தான் தொழுதோம். இமாம் ஆண்தான். பெண்களுக்கெனத் தனியிடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதிகக் கூட்டமான நாட்களில் இடைவெளியில்லாமல் வரிசை அமைந்துவிடுவதால் ஆணும் பெண்ணும் சேர்ந்து தொழுவது போலவே தோன்றும்! மதீனாவில் பெண்கள் தொழுவதற்கு நல்ல ஏற்பாடு செய்துள்ளனர். பெண்கள் தொழும் இடத்திற்கோ அவர்கள் நுழையும் வாசல் பக்கமோ கூட ஆண்கள் செல்ல முடியாது.

**மக்காவில் நீங்கள் தங்கி இருந்த இடத்திலிருந்து கஃபா எவ்வளவு தூரம்? நடந்து போனீர்களா? காரில் போனீர்களா?**

மக்காவில் நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து கஃபா சுமார் இரண்டு பர்லாங்கு தூரம். தினமும் நடந்துதான் செல்வோம். காலையில் சுபுஹு தொழுது விட்டு வீடு வந்து சமையல் வேலைகளை முடித்துக் கொண்டு 11 மணியளவில் கஃபா சென்று லுஹர் தொழுது முடிந்ததும், வீடு வந்து சேர்வோம். அஸர் தொழுகைவரை ஓய்வு எடுத்துக்கொண்டு மஃரிபுக்கு முன்னரே கஃபா சென்று விடு

வோம். மக்ரிப் தொழுதபின் குர்ஆன் ஓதிக்கொண்டிருப் போம். இஷாவுக்குப் பிறகு கூட்டம் குறைவாக இருந் தால் தவ்வாப் செய்துவிட்டு வீடு திரும்புவோம். இரவு சாப்பாட்டை முடித்துக் கொண்டு படுக்கச் செல்ல 11 மணியாகிவிடும்.

ஹஜ்ஜுத் தொழுகைக்கு ஒலி பெருக்கி உண்டா?

மினு, அரபாத், முஜ்தலிபா முதலிய இடங்களில் இந்த 5 நாட்களும், இபாத்ததில் ஈடுபட்டிருப்பர்; இக் கடமை களை நிறைவேற்றுவது தான் ஹஜ்ஜு. மக்காவிலும், மதீனு விலும் எல்லா தொழுகைக் கும் ஒலிபெருக்கி உண்டு. அவை மிக நல்ல முறையில் வேலை செய்கின்றன. மிஸ்ர் (எகிப்து) தேசத்தவரும் மற்ற வர்களும் சேர்ந்து கூட்டமாக இருந்து மௌலூது ஓதுகின்ற னர். மதீனுவில் இஷாவுக்குப் பிறகு இனிமையாகக் 'கிருஅத்' ஓதுகின்றனர். சுத்தத் திருக் குர்ஆன் வசனத்தின் இசை இன்பம் இதயமெல்லாம் தித்திக்கிறது! நாங்கள் தங்கியிருந்த ஹோட்டல் ரவ்லாஷரீபுக்கு வெகு அருகில் இருந்தது. இதனுல், நாங்கள் அடிக்கடிச் செல்லவும், கூட்ட நெரிசல் இல்லாத சமயங்களில் நபிகள் நாயகம் அவர்களுக்கு 'ஸலாம்' சொல்லவும், அவர் கள் நின்று தொழுத புனித மான இடங்களில் நாங்களும் நின்று தொழுததும் பெரும் பாக்கியமாக இருந்தன. பெரு மானுர் அவர்கள் தொழுத இடத்தில் நாமும் தொழுகி ரேம் என்பதை எண்ணும் போது நெஞ்செல்லாம் நிம்

மதியால் நிறைகிறது.

மதீனவில் உணவுப் பண்டங்களை வழங்கும் ஹோட்டல்கள் எத்தனை நிரந்தரமாக இருக்கின்றன ?

சுமார் 200 அங்கு. ஹஜ்ஜுக் காலத்தில் நடைபெறும் வியாபாரத்தில் கிடைக்கின்ற இலாபம் ஆண்டு முழுதுக்கும் போதுமானதாக இருக்கும்!

மேனட்டு முஸ்லிம் பெண்களைப் பார்த்தீர்களா? அவர்களின் நடைஉடைகள் எப்படி இருந்தன ?

வெளி நாட்டுப் பெண்கள் வெகுபேர் வந்திருந்தனர். அவர்களில் ஆப்ரிக்க நாட்டுக் கருப்பர்களே அதிகம். பார்ப்பதற்கு இவர்கள் அழகில்லாமல் இருந்தாலும், பழகுவதற்கு மிக நல்ல குணமுடையவர்களாகவே இருந்தனர். இவர்கள் சிறு குழந்தைகளை முதுகில் கட்டிப் போட்டுக்கொண்டே தொழுவதும், ருகூவிலும் சஜ்தாவிலும் குழந்தைகள் கூச்சலின்றி இருப்பதும் தாய்மார்கள் மற்ற வேலைகள் செய்வதும் நமக்குப் பெரும் வியப்பாக இருக்கிறது! மேல் நாட்டு வெள்ளை நிற இனத்தவரும் வந்திருந்தனர். அவர்களுடன் சைகை மூலமே பேசிக்கொண்டோம். பெண்கள் சிலர் முகத்தில் ஒப்பனை செய்துகொண்டு வந்திருந்தனர். வெளியில் செல்லும் போது மட்டுமே அவர்கள்

'பர்தா' அணிகின்றனர். அரபு நாட்டுப் பெண்களிலும் சிலர் முகத்திற்கு 'மேக்கப்' செய்து, கௌன் அணிந்துகொண்டும் வந்தனர்.

**நீங்கள் எத்தகைய உடையணிந்தீர்கள்? பர்தா முறை அங்குப் பேணப்படுகிறதா?**

நாங்கள் வழக்கமாக அணியும் பத்தாய் கைலி, தாவணி தான் அதிகமாய் அணிந்தோம். ஹஜ்ஜு நாட்களிலும் தொழச் செல்லும் போதும் வெள்ளை உடை அணிந்தோம். சேலைகள் எடுத்துச் சென்றிருந்தோ மென்றாலும், அதிகமாகப் பயன்படுத்துவதில்லை. ஏனென்றால், கைலி தாவாணி துவைத்து உடுத்துக் கொள்ள வசதியாக இருந்தன, சேலைகளைத் துவைத்துக் காயவைத்துக் கட்டிக் கொள்வதென்பது பெரிய சிரமம். பொதுவான உடையணிவதில் எவ்விதக் கட்டுப்பாடும் கிடையாது. பெண்களுக்கு 'இஹ்ராம்' என்பது தலையில் துணி கட்டிக்கொள்ள வேண்டும்; அவ்வளவுதான். பெரும்பாலார் முகத்தில் மெல்லிய திரை இடப்பட்ட கருப்புப் பர்தா அணிந்தே வந்திருந்தனர். இந்தியப் பெண்களுள் பெரும்பாலார் பர்தா அணிந்தேயிருந்தனர். ஆனால் எங்களுக்குப் பழக்கம் இல்லாததால் நாங்கள் இந்தப் பர்தாஅணியவில்லை.

**பெண்கள் தொழவோ குர்ஆன் ஓதவோ கூடாத நாட்களாக இருந்தால் ஹஜ்ஜு நிறைவேறுமா?**

கஷ்டமான நாட்களில், கஃபாவுக்கோ, ரவ்லாஷரீபுக்கோ செல்வதும், குர்ஆன் ஓதுவதும் தொழுவதும் கூடாதுதான். என்றாலும், ஹஜ்ஜின் நாட்டத்துடன் உறுதியோடு சென்ற காரணத்தால் எந்த நிலைமையிலும் ஹஜ்ஜு நிறைவேறி விடுகிறது. இறைவன் இம்மாதிரியே இஸ்லாமிய மார்க்கத்தை எளிதாக்கி வைத்துள்ளான். அனுவசியக் கட்டுப்பாடு இல்லாத அன்பு மதம் இஸ்லாம். இம்மாதிரி சந்தர்ப்பம் ஏற்படாதிருக்கப் பெண்கள் சிலர் மருத்துவர்களிடம் மருந்து வாங்கிச் செல்கின்றனர். இது தேவை இல்லாத ஒன்று. அதிக அலைச்சலால் காய்ச்சல் உண்டாகிறது, காலில் பித்தவெடிப்பு ஏற்படுகிறது. உதடு வெடிக்கிறது. இத்தகைய நோய்கள் நீங்குவதற்கான மருந்து வாங்கிக் கொண்டுபோவது நலம். முடிவாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். பல நாடு, பலமொழி, பல நிறம், பல வகையான மக்கள் அங்கே கூடுகின்றனர். அனால் யாவருமே ஒரே கொள்கை யுடையவர்கள்! இஸ்லாத்தின் இச் சிறந்த கொள்கையை அறியும் போது இதயம் பூரிக்கிறது! அரேபியாவை மட்டுமன்று, அகில உலகையுமே அங்கு காண்பது போன்ற ஓர் அரிய காட்சி எப்போதும் கண்முன் நின்று களிப்பூட்டுகிறது!

## சந்தா விபரம்

| | உள்நாடு | வெளிநாடு |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | 5-00 | 9-00 |
| இரண்டு ஆண்டு | 10-00 | 18-00 |

*சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்ப வேண்டும்.*

**முஸ்லிம் முரசு**

18, ராமசாமித் தெரு, மண்ணடி, சென்னை-1.

ருஷ்யச் சிறு கதை




வெரோச்கா பரோஷிஞவை நீங்கள் சந்தித்திருக்க மாட்டீர்கள். அவளை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கட்டுமா? என்னைக் கேட்டால் வேண்டாம் என்றே சொல்வேன். ஏனெனில் இனி நீங்கள் அவளைச் சந்தித்துப் பிரயோசனமில்லை. இருந்தாலும் நீங்கள்விரும்பினுல், அவளை ஒரு முறை பார்க்க அனுமதிக்கிறேன்.

அதோ உங்களுக்குப் பின்னுல் வலது பக்கத்தில் உட்கார்ந்திருக்கிருள், பாருங்கள்! அவசரம் வேண்டாம், மெள்ளத் திரும்பிப் பாருங்கள்!

என்ன, பார்த்தீர்களா? எப்படி இருக்கிருள்? அவளுடைய புன்னகையைக் கவனித்தீர்களா?

புன்னகையின்றி வாழ முடியாதவர்கள் பலரும் உண்டு. வாழ்க்கையிலே அவர்களுக்கு அத்தனை ஆர்வம். உற்சாக உள்ளமுடைய இவர்கள், எந்நேரமும் இனிய முறையில் புன்னகை புரிகின்றனர்.

வெரோச்காவின் புன்னகையைப் பற்றி ஏன் இப்படி அடுக்கிக்கொண்டு போகிறேன் என்று ஆச்சரியப்படுகிறீர்களா? இந்தப் புன்னகை வெரோச்காவின் வேலைக்கு இடைஞ்சலாகி விடுவதாக சில தோழர்கள் நினைக்கின்றனர். இது சரியல்ல என்பதை உணர்த்தவே இவ்வளவு விரிவாகச் சொல்கிறேன்......

அவளுக்கு என்ன வேலை என்பதைச் சொல்ல மறந்துவிட்டேனே. டிராலி பஸ்களில் டிக்கெட்டு பரிசோதனையாளர் அவள்.

ஒரு வாரத்திற்கு முன்னர் வேலையிலிருந்து திடீரென்று விலகிக்கொண்டு விட்டாள்.

ஏன் தெரியுமா? சொன்னுல் நம்பமாட்டீர்கள். புன்னகை புரியாதிருக்க முடியாமல் வேலையையே விட்டுவிட்டாள்!

போரிஸ் லாஸ்கின்

மிஷா பராபஞேவ் என்பவர் டிராலி பஸ் டிரைவராக வேலை செய்கிருர். ஒரு நாள் அவர் வெரோச்காவிடம் இவ்வாறு கூறினர் :

"டிக்கெட்டில்லாத பிரயாணியிடம் எப்படி நடந்து கொள்வது என்று உனக்குத் தெரியவில்லையே !.....கடிந்து கொண்டால்தான் பிரயாணி தமது குற்றத்தை உணர்ந்து கொள்வார். அதில்லாமல் முகத்திலே புன்னகை தவழ 'நண்பரே, டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்வது தவறு; நீங்கள் அபராதம் கட்ட வேண்டும்' என்று சொன்னல் சரிப்பட்டு வருமா ?......"

"என்ன செய்வேன் ?—என் சுபாவம் அது. புன்னகை புரியாமல் என்னல் இருக்க முடியாதே" என்ருள், வெரோச்கா.

"புன்னகைப் புரிய வேண்டாமென்று நான் சொல்லவில்லை" என்ருர் பராபஞேவ். "டிக்கெட்டில்லாத பிரயாணியிடம் அபராதத்தை வசூலித்து, ரசீது கொடுத்துவிட்டு, அப்புறம் தாராளமாக புன்னகை செய்யலாமே! அந்தப் புன்னகையில் அவர் இந்த உலகையும், தான் செலுத்திய அபராதத்தையும் கூட மறந்து விடுவார். உன்னுடைய புன்னகைக்கு அப்பொழுது பயனுண்டு. இந்த வசீகரப் புன்னகையைக் கொண்டு நீ ஒரு பெரிய பண்டக சாலையின் மானேஜராகத் திறம்பட வேலை செய்யலாமே......"

"அது எப்படி?"

"அதிருப்தியடைந்த வாடிக்கைக்காரர் யாராவது புகார் எழுதுவதற்காக புகார் புத்தகத்தை அவரிடம் கொடுத்துப் பார் ! உடனே அவருடைய கோபமெல்லாம் பறந்தோடி விடும். புகார் செய்ய வந்த மனிதர், பண்டகசாலையைப் பற்றி வானளாவப் புகழ்ந்து எழுதிவைத்துவிட்டுப் போவார் !"

"அப்படியானல், இனி டிக்கெட்டில்லாதவர்களிடம் கடுகடுத்த முகத்துடன் அபராதம் வசூலிக்கிறேன். இடைவேளை, ஞாயிற்றுக்கிழமை, விடுமுறை நாட்கள்—இவை தவிர இதர நேரங்களில் புன்னகையின்றி கடுகடுப்பாக இருக்க முயலுகிறேன்" என்ருள் வெரோச்கா.

இதைக் கூறி முடிப்பதற்குள் அவள் முகத்தில் புன்னகை பூத்துவிட்டது !

இதன்பின் ஒரு சுவாரஸ்யமான சம்பவம் நடைபெற்றது.

பஸ் நிற்குமிடத்தில் வெரோச்கா நின்று கொண்டிருந்தாள். அப்பொழுது ஒரு டிராலி பஸ் வந்து நின்றது. ஏறும் வழியாக ஒரு இளைஞன் அவசரமாய் இறங்கி எல்லோரையும் தள்ளிவிட்டு முண்டியடித்துக் கொண்டு வெளியே வந்தான். ஆனல் வெரோச்கோ அவனை வழி மறித்து, "சற்று நில்லுங்கள்!" என்ருள்.

அவன் திரும்பிப் பார்த்தான். எழிலுரு நங்கை ஒருத்தி எதிரே நிற்கக்கண்ட அவனுக்கு இருதயமே நின்றுவிடும் போலாயிற்று. இளைஞன் வாட்டசாட்டமாய் கண்ணுக்கு இனியனாய் இருப்பதை வெரோச்கா கவனித்தாள். அவனுடைய பழுப்பு நிற விழிகளையும் அவள் கவனிக்கத் தவறவில்லை.

“பஸ் விதிகளை மீறிவிட்டீர்கள்!” என்றாள்.

“யார்?”

“நீங்கள்தான்”

“நானா?”

“ஆம், நீங்கள்தான்!”—வெரோச்காவால் புன்னகை செய்யாமலிருக்க முடியவில்லை.

இளைஞனின் முகமும் இன்முறுவலால் மலர்ந்து விட்டது.

“நான் விதிகளை மீறியிருந்தால் சட்டப்படி அதற்குரிய தண்டனையை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்” என்றான்.

“சரியான இடமாகப் பார்த்துத்தான் விதிகளை மீறியிருக்கிறான்; கொடுத்து வைத்தவன்!” பஸ் ஸ்டாப்புக்காக காத்திருந்த கூட்டத்தில், யாரோ ஒருவர் அவனை நையாண்டி செய்தார்.

உடனே எல்லோரும் சிரித்து விட்டனர்.

“விதிகளை மீறியதற்காக அபராதம் கொடுக்க வேண்டும்!” என்றாள் வெரோச்கா.

“ஓ, தாராளமாகக் கொடுக்கிறேன்” என்றான் இளைஞன். அவள்மீது பதித்த விழிகளை எடுக்காமலேயே நெடுநேரம் பையைத் துழாவினான். ஆனால் பணம் எதுவும் வெளியே வரவில்லை.



கூட்டத்தில் கேலிப் பேச்சுகள் அதிகரித்தன.

அடுத்த டிராலி பஸ் வந்தது. இளைஞனைத் தவிர எல்லோரும் ஏறிக் கொண்டனர். இளைஞன் இன்னமும் பையைத் துழாவிக்கொண்டே நின்றான்.

"இப்பொழுது பணமில்லை என்றால் பரவாயில்லை. உங்கள் முகவரியைக் கொடுத்து விட்டுச் செல்லுங்கள். 'சமமன்ஸ்' அனுப்பிவைக்கிறேன்.." என்று கூறினாள், வெரோச்கா.

"என் முகவரியை எழுதிக் கொள்ளுங்கள். ஆனால் நான் இருக்கும் இடத்திறகு 'சம்மன்ஸ்' வந்து சேரப் பல நாட்கள் பிடிக்கும்."

"அவ்வளவு தூரத்திலா இருக்கிறீர்கள்?"

"ஆம், புதிய மின் நிலையம் கட்டப்படும் கிராஸ்னோயார்ஸ்கில் இருக்றேன்."

"அங்கேதான் வேலை செய்கிறீர்களா?"

"ஆம், வேலையாக இங்கே விமானத்திலே வந்தேன். வந்தவன் விதிகளை மீறிவிட்டேன்."

"அவசரத்தில் இப்படித்தான் ஏறும் வழியாகப்பலரும் இறங்கி விடுகிறார்கள். அபராதம் விதிக்காமல் இம்முறை உங்களை விட்டு விடுகிறேன். தயது செய்து இனிமேல் இவ்வாறு செய்யதீர்கள்!"

நாணத்தால் அவனைநேருக்கு நேர் பார்க்காமல் வெரொச்கா கூறினாள். ஆனால் இளைஞன் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"குற்றம் இழைத்தவனைத் தண்டிக்காமல் போகச்சொல்கிறீர்களே!"

"நான்தான் எச்சரிக்கை செய்துவிட்டேனே! இம்முறை

அது போதும்."

"வெறும் எச்சரிக்கை செய்தால் போதுமா? என் போன்றவர்கள் இம் மாதிரி மீண்டும் விதிகளை மீறுமலிருக்க வேண்டுமாஞல் தக்கபடி தண்டனை கொடுத்தாக வேண்டும்."

வெரோச்காவின் முகத்தில் புன்னகை அரும்பிற்று. சாமர்த்தியமாகப் பேச்சை மாற்றிஞள்: "உங்களுடைய நிர்மாணத் தளத்தில் வேலைகள் சரிவர நடக்கின்றனவா? வேலை தெரிந்தவர்கள் மட்டும்தான் அங்கு வேலை பெற முடியுமா? அல்லது வேலை தெரியாதவர்களும் சேர்ந்து பயிற்சி பெற்றுக் கொள்ளலாமா?"

"என்ன அப்படிக் கேட்கிறீர்கள்! வேலை தெரியாதவர்கள் எத்தனையோ பேர் அங்கு சேர்ந்து வேலைப் பயிற்சி பெறுகிருர்களே. அவர்களுக்கு வேலை கற்றுக்கொடுப்பதற்கென பயிற்சி வகுப்புகள் நடைபெறுகின்றன. சைபீரியாவல்லவா? அங்கே எல்லாமே பிரம்மாண்ட அளவில்தான் நடைபெறுகின்றன. நீங்கள் அங்கே வந்து பாருங்கள், பிரமாதமாயிருக்கும். வருத்தப்படக் கூடாது—ஆஞல் இப்பொழுது நீங்கள் செய்துவரும் வேலை விரைவில் நசித்துவிடப் போகும் வேலை. டிக்கெட் பரிசோதனையாளரே தேவையில்லாத நிலை உருவாகிவருகிறது. பெரும்பாலான டிராலி பஸ்கள் இப்பொழுது கண்டக்டர்கள் இல்லாமல் ஓடுகின்றன! பிரயாணிகள் நேர்மை மிக்கவர்களாகி விட்டனர். டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்வோரைக் காண்பது அரிதாகிவிட்டது."

"உண்மைதான். ஆஞல் ஏறும் வழிக்கும் இறங்கும் வழிக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள் பலரும் இருக்கிருர்களே" என்று வெரோச்கா நகைத்துக் கொண்டே சொன்ஞள்.

"இருக்கலாம், ஆஞல் இனி மேல் நான் அவ்வாறு செய்ய மாட்டேன். அதுவும் என் அருகில்..."

"என்ன சொல்கிறீகள்?"

"...அதாவது நான் பணியாற்றும் நிர்மாணத் தளத்தில் என் அருகே மாஜி டிக்கெட் பரிசோதனையாளர் ஒருவர் வேலைசெய்யவும் போது, நான் எப்படி மீண்டும் இது போன்ற தவறுகள் செய்ய முடியும்?"

இனி அனுவசியமாக வளர்த்துக்கொண்டு போவானேன். கதையின் முடிவை நீங்களே ஊகித்துக் கொண்டிருப்பீர்கள். ஆயினும் சுருக்கமாகக் கூறிவிடுகிறேன். இதன் பின்னர், இந்த இளம் காதலர்களிடையே மேலும் நேசம் வளர்ந்தது. இபபொழுது இருவரும் சைபீரியாவிலுள்ள கிரோஸ்னேயாஸ்க மின் நிலையத்திற்குச் செல்வதற்குத் தயாராகி வருகின்றனா.

புன்னகை எத்தகைய அற்புதங்கள் நிகழ்த்துகிறது, பார்த்தீர்களா!

-"சோவியத் நாடு"

# மாதர் திலகம் மறைவு

இரவணசமுத்திரம் பெருநிலக்கிழார் அல்ஹாஜ் ஜனாப் S. M. பால்முகம்மது சாகிப் அவர்களின் வாழ்க்கைத் துணைவியாரும், இரவணசமுத்திரம் ஊராட்சி மன்றத்தின் முன்னாள் உபதலைவர் ஜனாப் R. P. M. ஆதம் சாகிப், பன்னூல் ஆசிரியர் R. P. M. கனி பி. ஏ. பி. எல். வழக்கறிஞர் ஜனாப் R. P. M. மீரான் பி. ஏ., பி. எல். ஆகியவர்களுடையவும். மற்றும் ஐந்து பெண்மக்களின் அன்புத் தாயாரும், ஏழை எளிய ஆண்-பெண்களுக்கும், பல இஸ்லாமிய நற்காரியங்களுக்கும் அந்தரங்கமாகவும்-பகிரங்கமாகவும் ஈந்துமகிழ்ந்த புனிதவதியும், ஆண் மக்களின் பத்தொன்பது பேரக்குழந்தைகளுக்கு அத்தம்மாவாகவும் பெண்மக்களின் முப்பது பேரக்குழந்தைகளுக்கு அம்மம்மாவாகவும், ஆறு குழந்தைகளுக்கு பூட்டியாராகவுமான பாக்கியம் பெற்ற—பெருமகளார் ஜனாபா பாத்திமா பீவி அம்மையார் தமது 67வது வயதில் 8—8—66 அன்று காலமாகி விட்டார்கள்!

(இன்னாலில்லாஹி-வ-இன்னா இலைஹி இராஜிஊன்.)

மர்ஹூமா அவர்களின் நல்லுடல் அடக்கத்திற்கும், 11—8—66 வியாழக்கிழமை பகல் 11-மணி அளவில் இரவணசமுத்திரத்தில் ஓதிய "ஹத்தம்" பாத்திஹாவிற்கும் பல ஊர்களிலிருந்தும் ஏராளமான ஆண் பெண்கள் வந்துகலந்து - மர்ஹூமா அவர்களின் ஆத்ம சாந்திக்கு அல்லாஹ் இடம் பிரார்த்தனை செய்தார்கள்.

# டாக்ஸி

பிரிட்டனுக்கு வருகிறவர்கள் அங்குள்ள போலீஸ்காரர்கள் அற்புதமாகப் பணிபுரிகிறார்கள் என்று கூறுவதுண்டு. இந்தப் புகழுரை லண்டனிலுள்ள வாடகை மோட்டார் ஓட்டிகளுக்கும் பொருந்தும். அமெரிக்கவணிகர் திரு. இர்விங் அண்மையில் லண்டனுக்கு வந்திருந்தார். தம்முடைய அலுவல்களை முடித்துக்கொண்டு அமெரிக்காவுக்குத் திரும்புவதற்காக விமான நிலையத்திற்குச் சென்றபோது கைப்பையை மறதியாக டாக்ஸியில் வைத்துவிட்டார். அதில் மூவாயிரம் டாலர்கள் ரொக்கமும் மூவாயிரம் டாலர்களுக்கு பிரயாணி காசோலைகளும் இருந்தன. விமான நிலையத்திற்கு வெளியேயுள்ள ஓரிடத்தில் பெட்ரோல் பிடிப்பதற்காக வண்டியை நிறுத்திய போது, பின்புற இருக்கையில் கைப்பை இருப்பதை மோட்டார் ஓட்டி கவனித்தார். உடனே அதைச் சொந்தக்காரரிடம் சேர்த்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் அவர் விமான நிலையத்திற்குத் திரும்பி, திரு. இர்விங்கைத் தேடினார்.

"நான் அளித்த வெகுமதியை ஏற்கஅந்தக் காரோட்டி மறுத்துவிட்டார்" என்றார் திரு. இர்விங். "விமான நிலையத்தை அடைந்ததும் வண்டிச் சத்தத்துடன் சிறு தொகையையும் வெகுமதியாகப் பெற்றுக் கொண்டு விட்டதால் மீண்டும் வெகுமதி பெறுவது நியாயமில்லை என்று அவர் கூறினார். தம்முடைய பெயரையும் கூற அவர் மறுத்துவிட்டார்."

லண்டனில் சுமார் ஒன்பதாயிரம் டாக்ஸிகள் ஓடுகின்றன. அவற்றில் சிலவற்றை, இரவு பகல் முறை போட்டுக்கொண்டு இரண்டு டிரைவர்கள் ஓட்டுகிறார்கள். சுமார் நாலாயிரம் டாக்ஸிகளை சொந்தக்காரர்களே ஓட்டுகிறார்கள். மற்றவை வாடகை மோட்டார் கம்பெனிகளுக்குச் சொந்தமானவை. இவற்றை ஊதியம் பெறும் காரோட்டிகள் ஓட்டுகிறார்கள்.



லண்டனில் டாக்ஸி டிரைவராகப் பணியாற்றுவது எளிதல்ல, ஸ்காட்லாந்து யார்டின் நிர்வகத்திற்குட்பட்ட பப்ளிக் காரிஜ் ஆபீஸி'டமிருந்து லைசென்ஸ் பெற்றவர்களே வாடகைக் காரோட்டிகளாகப் பணியாற்றமுடியும். காரோட்டிகள் 'நாலெஜ்' என்று குறிப்பிடும் தேர்வில் வெற்றிபெற்றால்தான் லைசென்ஸ் கிடைக்கும். காரோட்டிக்கு லண்டன் நகரத்தைப் பற்றிச் சோதித்துத் தெரிந்து கொண்ட பிறகுதான், தேர்வுக் குழுவினர் அவருக்கு லைசென்ஸ்

வழங்குவார்கள். லண்டன் மாநகரத்தில் சுமார் 38,500 தெருக்கள் உண்டு; பல்லாயிரக்கணக்கான உணவு விடுதிகள், சிற்றுண்டிச் சாலைகள், சங்கங்கள் பொழுதுபோக்குமிடங்கள், நிறுவனங்கள், வைத்திய சாலைகள், பொருட்காட்சி மண்டபங்கள், ரெயில்வே நிலையங்கள் முதலியவை உண்டு. காரோட்டி இவைபற்றிய தகவலகளைத் தெரிந்து கொள்வதுடன், நகரத்தில் எங்கு எங்கு ஒரு வழிப் பாதைகள் உள, போக்குவரத்துக் கட்டுப்பாடுகள் உள என்பதைப்பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டும்.

தெற்கு லண்டனைச் சேர்ந்த லூயிபாம், 'நாலெஜ்' தேர்வில் வெற்றி பெறுவதற்கு தாம் பட்ட சிரமங்களை நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறார். "நான் லண்டனில் பிறந்து வளர்ந்தவன். லண்டனைப்பற்றிய தகவல்கள் அனைத்தும் தெரியும் என்று கருதிய எனக்கு, தேர்வில் கலந்து கொண்ட போது தான் என்னுடைய கருத்து தவறானது என்று தெரிந்தது. என்னுடைய அறிவை அபிவிருத்தி செய்து கொள்வதற்காக, பிரிட்டிஷ் லீஜன் ஸ்கூல் ஃபார் டாக்ஸி டிரைவர்ஸ் என்ற பயிற்சிப் பள்ளியில் சேர்ந்தேன்" என்கிறார் திரு. லூயி பாம்

காரோட்டிகளாகப் பணியாற்ற விரும்பும் முன்னாள் படைவீரர்களுக்கு பயிற்சியளிக்கும் நோக்கத்துடன் நிறுவப்பட்ட இந்தப் பயிற்சிப் பள்ளியில், பப்ளிக்காரிஜ் ஆபீஸ் வெளியிட்டுள்ள 'புளுபுக்' என்ற தகவல் குறிப்பேட்டை ஆதாரமாகக் கொண்டு பயிற்சியளிக்கிறார்கள். லண்டன் நகரத்தின் கேந்திரப் பகுதிகளை இணைக்கும் 486 மார்க்கங்களைப் பற்றியும், விடுதிகள், வைத்திய சாலைகள், தியேட்டர்கள் முதலியவைப் பற்றியும் தகவல்கள் வழங்கும் இந்தக் குறிப்பேட்டிலுள்ள விஷயங்களை. காரோட்டிகள் மனப்பாடம் செய்ய வேண்டும்.

டாக்ஸி டிரைவர்களாக தொழில் நடத்த விரும்புகிறவர்கள் 'நாலெஜ்' பரீட்சைக்குத் தங்களைத் தயார் செய்து கொள்ளும் போது இரண்டு இரண்டு பேர்களாகவோ, நான்கு ஐந்து பேர்களுள்ள குழுவாகவோ சேர்ந்துகொண்டு உழைக்கிறார்கள். சிலர் ஸ்கூட்டர் அல்லது மோட்டார் சைக்கிளை உபயோகிறார்கள். சிலர் சாதாரண சைக்கிள் வண்டியை உபயோகிக்கிறார்கள். லூயிபாம் லண்டன் நகரை சைக்கிளிலேயே சுற்றி வந்தார், "நான் பயிற்சியை முடித்தபோது நகரில் சுமார் ஆயிரம் மைல்கள் வரையில் சைக்கிளில் சுற்றி யிருப்பேன்" என்கிறார் லூயி பாம். "நான் தினந்தோறும நான்கு மார்க்கங்களில் சுற்றத் திட்டம் போட்டுக்கொள்வது வழக்கம். சனிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை உட்பட ஒருவாரம் முழுதும் உழைத்து 18 மார்க்கங்களைச் சுற்றி முடித்து விடுவேன்"

இப்படிச் சுற்றித் திரிந்து நகரிலுள்ள சாலைகளைத் தெரிந்து கொள்ளும் பயிற்சியாளர்கள், உணவு நேரத்திலும் ஓய்வு நேரத்திலும், ஒருவருக்கொருவர் கேள்விகளைக் கேட்டுக்கொண்டு, தங்களுடைய அறிவுத் திறனைச் சோதித்துக்கொள்வார்கள்; சுற்றிய தெருக்கள், திருப்பங்கள் முதலியவற்றின் பெயர்களை நினைவு படுத்திக்கொள்வார்கள். 'பப்ளிக் காரிஜ் ஆபீஸுக்கு அருகிலுள்ள மார்க்கன்டோனியோஸ் என்ற உணவு விடுதியில் காரோட்டிகள் கூடும்போது தான் இம்மாதிரி உரையாடல்கள் பெரும்பாலும் நடைபெறும். தேர்வுக்கு வரும் காரோட்

# அணு குண்டு : ஹிரோஷிமாவில்

ஹிரோஷிமா, ஆக. 6—ஹிரோஷிமா என்ற ஜப்பானிய நகர் மீதுதான் 21 ஆண்டுகளுக்குமுன் ஆக-6ந் தேதியன்று முதல் அணுகுண்டு விழுந்தது. இன்று காலை 8-15 மணிக்கு மக்கள் அந்த நாளை நினைவு கூர்ந்து அன்று உயிர்நீத்தவர்களுக்கு மௌனஞ்சலி செலுத்தினர்.

4 டன் எடை. 9 அடி நீளம் இருந்தது அந்தக் குண்டு· அது விழுந்தபோது 4,20,000 பேர் நகரில் வாழ்ந்தனர். அவர்களில் ஒரு லட்சம் பேர்தான் இன்று உயிருடன் இருக்கிறார்கள்.

குண்டு வெடிக்குப் பிறகு 1,76,987 பேர் உயிருடன் இருப்பது தெரிந்தது. அவர்களில் பலர் புதிய அணு குண்டு ஆஸ்பத்திரியில் இருந்து வருகின்றனர். புற்று நோய், இரத்த சோகை காரணமாக அவர்களில் பலர் இன்னும் அன்றாடம் மடிந்த வண்ணம் இருக்கின்றனர்.

உலகில் சாந்தி நிலவ வேண்டும் என்ற ஆர்வத்தை வெளிப்படுத்தும் வகையில், நகர மேயர் ஒரு ஆயிரம் புறாக்களை விடுவித்தார். மேயரும் அணுகுண்டு தாக்குதலின் விளைவுகளை அனுபவித்தவர்.

---

டிகள், மாதம் ஒருமுறை அதிகாரிகள் முன்னிலையில் நின்று அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு விடையளிக்கவேண்டும். இந்தச் சோதனையை 'அப்பியரன்ஸ்' என்று குறிப்பிடுகிறார்கள். 'அப்பியரன்ஸ்' முடிந்ததும் ஒரு காரோட்டி, மர்க்கன் டோனியோஸ் விடுதிக்கு வந்து, அங்கு குழுமியிருக்கும் காரோட்டிகளைச் சந்தித்து, அதிகாரிகள் தன்னை என்ன என்ன கேள்விகளைக் கேட்டார்கள், அவற்றில் எத்தனை கேள்விகளுக்குத் தன்னால் விடையளிக்க முடிந்தது என்பதைப் பற்றிக் கூறுவதுண்டு, "கேள்விகள் கடினமாக இருந்தாலும் குதர்க்கமாக இருந்தாலும் நீ அமைதியாகப் பதிலளிக்க வேண்டும். தேர்வு அதிகாரியுடன் வாதாடினால், நீ பிரயாணிகளிடமும் இப்படித்தான் வாதாடுவாய் என்று அவர் எண்ணிவிடக் கூடும். உனக்கு லைசென்ஸ் வேண்டுமானால் நீ அமைதியாகவும் நியாயமாகவும் பேசுகிறவனாகக் காட்டிக்கொள்ள வேண்டும்" என்கிறார் லூயி பாம்.

டிரைவர்கள் கொஞ்ச கொஞ்சமாகக் கற்று முன்னேறுவதாகத் தெரிந்தால் நேர்முகப் பரீட்சைகளுக்கிடையேயுள்ள இடைவெளியைக் குறைப்பார்கள். லூயி பாம் ஒரு மாத இடைவெளியில் 8 முறையும் 21 நாட்கள் இடைவெளியில் 6 முறையும் 'அப்பியரன்ஸ்' கொடுத்திருக்கிறார். அவர் பரீட்சையில் தேறி லைசென்ஸ் பெறுவதற்கு சுமார் ஓராண்டுகாலம் ஆயிற்று. நாள் முழுதும் வேலை செய்யும் ஒருவருக்கு, லைசென்ஸ் பெறுவதற்கு ஓராண்டுக் காலம் ஆகும்,

போதுமான பண வசதியோ நேரமோ கிடைக்காமல், பகுதி நேரமாக உழைக்கிறவர்களுக்கு லைசென்ஸ் பெறுவதற்கு இரண்டு அல்லது மூன்றாண்டுகள் ஆக



லாம். 'நாலெஜ்' தேர்தலில் வெற்றி பெற்றவர்கள் தங்களுக்கு லண்டன் சுற்றுவட்டாரத்தைப் பற்றிய தகவல்கள் தெரியும் என்பதை உறுதிப்படுத்துவதற்காக மீண்டும் ஓர் தேர்வில் வெற்றி பெறவேண்டும். பிறகு 'போலீஸ் டிரைவிங் டெஸ்ட்' லும் தேர்ச்சி பெறவேண்டும். இருபத்தொரு வயதுக்கு மேற்பட்டவர்களுக்குத்தான் 'லைசென்ஸ்' வழங்குகிறார்கள். டாக்ஸி டிரைவர்கள் ஒழுக்கமும் ஆரோக்கியமும் உடையவர்களாக இருத்தல் வேண்டும். அவர்கள் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை வைத்திய பரிசோதனைக்குச் செல்ல வேண்டும்.

டாக்ஸி டிரைவராகத் தொழிலேற்பவர் அனுபவத்தால் பல விஷயங்களைத் தெரிந்துகொண்டு எல்லோருடனும் இங்கிதமாகப் பழக வேண்டும். ஒரு நாள் பொழுதில் ஒரு டிரைவர், பாராளுமன்ற உறுப்பினர் ஒருவரை மக்கள் சபைக்கு அழைத்துச் செல்ல நேரலாம். பிறகு அவசரமாக வீட்டுக்குப் போகத் துடிக்கும் ஒரு பெண்ணை அழைத்துச் செல்ல நேரலாம். அல்லது டெலிவிஷன் ஸ்டுடியோவுக்கு ஒரு நடிகையை அழைத்துச் செல்லலாம். லண்டன் நகரத்தைச் சுற்றிப்பார்க்க விரும்பும் வெளியூர் வாசியை ஏற்றிச் செல்லும் வாய்ப்புக் கிடைக்கலாம். அவருடைய அவசரத்தையும் நிலைமையையும் அனுசரித்து, ஒரு டாக்ஸி டிரைவர் செயலாற்ற வேண்டும்.

லண்டன் நகரத்தின் ஒவ்வொரு பகுதியையும் நன்கு அறிந்து ஒரு டாக்ஸி டிரைவர் ஒரு சம்பவத்தை என்னிடம் கூறினார்: சில ஆண்டுகளுக்கு முன்பு கிறிஸ்துமஸுக்கு ஒரு வாரம் இருக்கும் போது, மாலை நேரத்தில் ஓர் அமெரிக்கர் அவருடைய

வண்டியில் ஏறினூராம். போகும் வழியில் டிரைவர், அங்குள்ள கட்டடங்களைப்பற்றியசிறப்புக்களை அந்தப் பிரயாணிக்கு எடுத்துக் கூறினூர். அந்த அமெரிக்கருக்கு உற்சாகம் பிறந்து விட்டது. தாம் தங்கியுள்ள விடுதிக்குச் செல்லும் உத்தேசத்தை மாற்றிக் கொண்டு, அவர் லண்டனிலுள்ள முக்கிய இடங்களை எல்லாம் சுற்றிக் காட்டுமாறு டிரைவரைக் கேட்டுக்கொண்டார். இருவரும் இரவு பூராவும் ஊரைச் சுற்றி விட்டு அதிகாலையில் கவென்ட் கார்டன் காய்கறி—பழ மார்க்கெட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அருகிலுள்ள ஒரு விடுதியில் இருவரும் காலை உணவை முடித்துக் கொண்டு. அந்த அமெரிக்கர் தங்கியிருந்த விடுதிக்குத் திரும்பினூர்கள்.

அந்த டிரைவர், கிறிஸ்துமஸ் நாளன்று நியூ யார்க்கிலிருந்து அந்த அமெரிகடமிருந்து ஒரு கடிதம் வந்ததைக் கண்டு வியப்படைந்தார். அதில் லண்டனைச் சுற்றிப் பார்த்ததில் தமக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைக் குறிப்பிட்டு விட்டு அந்த அமெரிகர் பின்வறுமாறு எழுதியிருந்தார்: ''அந்த டாக்ஸியை நான் விலைக்கு வாங்க விரும்புகிறேன். ஆயிரம் டாலர்களுக்கு அதைத் தருவீர்களா?'' அது பழைய வண்டிதான். டிரைவர் அந்த வேண்டுகோளை மகிழ்ந்சியுடன் ஏற்றுக்கொண்டு, அந்த வண்டியை நியூயார்க்கிற்கு கப்பலில் அனுப்பிவைத்தார். "என்னுடைய பதினைந்து ஆண்டுகால சேவையில் நான் எத்தனையோ விசித்திரமான பிரயாணிகளைச் சந்தித்து ஆதாயம் பெற்றிருக்கிறேன். ஆனூல், வண்டியை வாங்கவேண்டும் என்று விரும்பிக் கேட்டவர் இவர் ஒருவர் தான்'' என்ருர் அந்த டாக்ஸி டிரைவர்.

மற்றேர் சமயம், இதே டிரைவர் போன்ட் தெருவிலுள்ள செயின்ட் கொலம்பாஸ் சர்ச் வழியே போய்க் கொண்டிருந்த போது கவலை தோய்ந்த முகத்தையுடைய ஓர் மதகுரு அவரைக் கூப்பிட்டார். வண்டிக்குள் ஏறி அமருவதற்குப் பதிலாக, அவர், பல மைல்களுக்கு அப்பாலுள்ள ஸெயின்ட் டன்ஸ்டன் வரையில் போய்வர முடியுமா என்று டிரைவரைக் கேட்டார் செயின்ட் டன்ஸ்டன் மாதாகோயில் உபதேச மேடையில் தம்முடைய தங்கக்கடியாரத்தை வைத்துவிட்டு வந்ததாகவும் அதை எடுத்துவருமாறும் கேட்டுக்கொண்டார். டிரைவர் அந்தப் பணியைச் செய்து முடித்து, அந்த மதகுரு தாராளமாகத் தந்த சம்மானத்தையும் பெற்றுக் கொண்டார்.

பிரயாணிகள் தங்களுடைய குடை, கைப்பை முதலியவற்றை ஞாபகமறதியாக டாக்ஸியில் விட்டுச் சென்று விடுவார்கள். லண்டன்டாக்ஸிடிரைவர்கள் நம்பிக்கைக்குரியவர்கள். அவர்கள் பிரயாணிகளைத் தேடிக் கண்டு பிடித்து பொருள்களை ஒப்படைத்து விடுவார்கள். பிரயாணிகளைத் தேட முடியாத சமயங்களில், வண்டியில் கிடக்கும் பொருள்களை 'பப்ளிக்காரிஜ் ஆபீஸின் லாஸ்ட் பிராபர்டி டிபார்ட்மெண்டுக்கு' அனுப்பி விடுவார்கள். இந்தப் பிரிவைச் சேர்ந்த அதிகாரிகள் அண்மையில் ஒரு வாரத்தில் 800 பவுன்கள் மதிப்புள்ள நகைகளை வெளிநாட்டுப் பிரயாணி ஒருவரிடமும் 5,000 பவுன்கள் அடங்கிய பையை வேறு ஓர் பிரயாணியிடமும் ஒப்படைத்தார்கள். வேறு ஓர் சமயத்தில் ஒரு வியாபாரி 8,000 பவுன்கள் மதிப்புள்ள ரத்தினக் கற்களை டாக்ஸியில் வைத்து விட்டுச்

சென்றார். அவற்றை அவரிடம் ஒப்படைக்க ஏற்பாடு செய்தார்கள்.

பிரயாணிகள் ஞாபகமறதியாக டாக்ஸியில் விட்டுச் செல்லும் பொருள்களை, டிரைவர் அருகிலுள்ள போலீஸ் ஸ்டேஷனில ஒப்படைத்துவிடுவார, அவற்றை பப்ளிக் காரிஜ் ஆபீஸுக்கு அனுப்பிவிடுவார்கள. சொந்தக்காரர வந்து கேட்டால் சட்டப்படி அவரிடமிருந்து ஒரு தொகையை கட்டணமாக வசூலித்துக்கொண்டு பொருளை அவரிடம் கொடுத்துவிடுவார்கள் இந்தத் தொகையில் பெரும் பகுதியை வெகுமதியாக டாக்ஸி டிரைவருக்குக் கொடுப்பார்கள ஒரு குடையைத் திருப்பித் தருவதற்கு மூன்று ஷில்லிங்குகளை வசூலிக்கிறார்கள். இதில் இரண்டரை ஷில்லிங்குகளை டாக்ஸி டிரைவருக்குத் தருகிறார்கள். விலை உயர்ந்த பொருளுக்கு அதிகக் கட்டணம் வசூலிப்பதால், டாக்ஸி டிரைவருக்குத் கிடைக்கும் சம்மானத் தொகையும் அதிகமாக இருக்கும்.

டாக்ஸி டிரைவர்கள் சுதந்திரமான வாழ்க்கை வசதியுடையவர்கள் அவர்கள் தங்களுடைய வேலையை விருப்பத்தோடு செய்கிறார்கள் வசதிக்கேற்ற முறையில் தங்களுடைய வேலை நேரத்தை ஒழுங்கு செய்து கொள்ள அவர்களால் முடியும். டாக்ஸி கம்பெனியில் வேலை செய்யும் ஒரு காரோட்டிக்கு டாக்ஸி மீட்டர் காட்டும் தொகையில் நூற்றுக்கு நாற்பது விழுக்காடு ஊதியமாகக் கிடைக்கிறது. அதைத் தவிர பிரயாணிகள் அன்பளிப்பாகத் தரும் தொகையும், சாமான்களை ஏற்றிச் செல்வதற்காக வசூலிக்கும் தொகையும் அவருக்குக் கிடைக்கிறது. காரோட்டிகள் தங்குவதற்காக நகரின் பல பகுதிகளில் விடுதிகள் உண்டு. இந்த விடுதிகளில் அவர்களுக்கு மலிவான விலையில் உணவும் சூடான பானமும் கிடைக்கிறது. சிறிது நேரம் தங்கி, பத்திரிகைகளைப் படிக்கவும் மற்றவர்களுடன் கலந்துரையாடவும் வசதியுண்டு

லண்டன் டாக்ஸி கார்களுடைய விசித்திரமான அமைப்பு முறையைக் கண்டு வெளியூர்க்காரர்கள் முறுவலிக்கலாம். ஆனால், வசதி நிறைந்திருக்க வேண்டும் என்று கருதி, நன்கு ஆராய்ந்து செய்யப்பட்ட ஏற்பாடு இது. பிரயாணிகள் தடுக்கிக்கொள்ளாமல் வண்டியில் ஏறி இறங்க வசதியாக இருக்கும் முறையில் உயரமான கதவுகளைப் பொருத்தியிருக்கிறார்கள். கால்களை முடக்கிக் கொண்டு அமராமல் வசதியாக அமரக்கூடிய முறையில் இருக்கைகளை அமைத்திருக்கிறார்கள். சாமான்களைத் துரிதமாக ஏற்றி இறக்கக்கூடிய முறையில் அறைகளை அமைத்திருக்கிறார்கள். விபத்துக்களைச் சமாளிக்கக் கூடிய உறுதியான கட்டுமான முடையவை இந்த வண்டிகள். டாக்ஸிகளை அன்றாடம் உள்ளும் புறமும் கழுவி சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். ஆண்டுக்கு ஒருமுறை எந்திரங்களைப் பழுதுபார்க்க வேண்டும். வண்டியில் மேல்பூச்சு கலைந்திருந்தாலும் அந்த வண்டியை சேவைக்கு அனுமதிக்க மாட்டார்கள்.

டாக்ஸி டிரைவர் ஒருவரை 'இந்த வேலை உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?' என்று கேட்டேன். 'உங்களுக்கு லண்டனைப் பிடித்திருக்கிறதல்லவா, அது போல்தான் எனக்கும். உலகத்திலேயே இதுதான் சிறந்த வேலை என்று சொல்வேன், என்றார் அவர்.

நன்றி: ''காமன் வெல்த் டுடே''




## 6. அழிவுக்கு முன் அகந்தை!

உயர்ந்து நின்ற ஒரு சிறு குன்றைப் பின்னணியாக வைத்துப் பாளையம் அடித்திருந்த முஸ்லிம்களின் கூடாரங்கள் தொலைவிலே சலசலத்தோடிய சிற்றோடை வரையிலும் பரவலாக அடிக்கப்பட்டிருந்தன. அக் குன்றின் அருகேயிருந்த பழைய கோட்டை ஒன்றில் தமது விடுதியை அமைத்திருந்தார் தளபதியார் ஸஅத். அவருக்கு உற்ற பணிவிடைகள் செய்ய அவருடைய மனைவியார் ஸல்மாவும் அங்கிருந்தார்.

பாரசீகத் தலைநகருக்கு முஸ்லிம்களின் சமாதானத் தூதுக் குழு ஒன்று சென்று திரும்பியதைப் பற்றிய முழு விபரத்தையும் கலீபாவுக்கு எழுதினார் ஸஅத். முஸ்லிம்களுக்கும் பாரசீகர்களுக்குமிடையே இனிமேல் வாள்முனைதான் தீர்ப்பளிக்க வேண்டுமென்று அந்தத் தூதுவர்கள் சொல்ல, அதை பாரசீக மன்னனும் ஏற்றுக்கொண்டு முஸ்லிம்களைக் களத்தில் குழிதோண்டிப்புதைத்துவிடத் தன்னுடைய தளபதி ருஸ்தூம் வருவான் என்று அவன் சூளுரைத்ததையும் அன்னவருக்கு அவர் தெரியப்படுத்தினர்.

அதற்கு மேலும் பாரசீகர்களுடன் போர் துவங்காது வாளாவிருக்க முடியுமா? அப் போரின் முடிவைப் பொறுத்திருந்தது, வளர்ந்துவரும் இஸ்லாமியக் குடியரசின் கண்ணியமும் கவுரவமும். ஏன், அதன் வல்லமையே சோதனைக் கட்டத்திலிருந்தது. அதை எண்ணிப் பார்த்த கலீபா உமர் கதிஸிய்யாவிலிருந்த தளபதியாரின் கையை முடிந்த அளவு பலப்படுத்தக் கருதி, தொடர்ந்து உதவிப் படைகள் அனுப்பிக் கொண்டிருப்பதாக அறிவித்திருந்தார்.

அந் நிலையில், ஓடைக்கு எதிர்கரையில் பாரசீகத் தளபதி ருஸ்தூம் மிகப்பெரும் படையுடன் வந்து முகாமடித்திருந்தான். பெரியதொரு யானைப் படையுடன் சிந்து நாட்டைச் சேர்ந்த ஜாட் வீரர்களும் அவனுக்குத் துணையாக வந்திருந்தனர். உண்மையில், மாபெரும் பாரசீகப் பேரரசின் வலிமைக்கு ஏற்பட்டிருந்த மகத்தான சோதனையை உணர்ந்த யஜ்திகிர்த் தன்னுடைய மகாத் தளபதி ருஸ்தூமிற்கு எல்லாவிதமான படை வசதிகளையும் சாதனங்களையும் தந்தனுப்பியிருந்தான்.

ஃபிரூஸன், ஹுர்மூஸான், மிஹ்ரான் போன்ற படைத் தலைவர்களும் அவனுக்கு உதவியாகச் சென்றனர். அத் தளபதியின் கீழ் மொத்தம் நூற்றிருபதாயிரம் வீரர்கள் இருந்தனர். அந்நேரம் மறுகரையில் பாரசீகர்களை எதிர் நோக்கியிருந்த முஸ்லிம்களோ முப்பதினாயிரம் பேர்கள் தாம்

என்றபோதிலும், முஸ்லிம்களின் வீர தீரத்தைப் பற்றி நன்கறிந்திருந்த பாரசீகர் அவர்களுடன் திடுமெனப் போர் செய்யத் தயங்கினர். அதை யுணர்ந்த ருஸ்தூமும் முஸ்லிம்களாகப் போர் ஆரம்பித்தால் ஆரம்பிக்கட்டும் என்று நினைத்திருந்தான். தக்க முன்னேற்பாடுகளின்றி அவசரப்பட்டு போர்தொடுத்து முஸ்லிம்களிடம் தோல்வியடைந்து தன்னுடைய நெடுநாள் புகழை ஒரு நொடியில் மண்ணில் புரளச் செய்துவிடக் கூடாதே என்று உள்ளூர அஞ்சியிருந்தான்.

நாட்கள் வாரங்களாயின.

முஸ்லிம்களுக்கும் பாரசீகர்களுக்குமிடையே தூதுவர்கள் சென்று வரலாயினர்.

முதல் முதலாக முஸ்லிம்களின் சார்பில் ரபீ ஆமிர் புறப்பட்டுச் சென்றார்.

அவரை வரவேற்கத் தன்னுடைய அவையைக் கூட்டியிருந்தான் ருஸ்தூம்.

விலையுயர்ந்த ரத்தினக் கம்பளங்கள் அவையெங்கும் விரிக்கப் பட்டிருந்தன. பொன்னும் மணிகளும் மின்னிடும் ஆடைகள் உடுத்தி. சுடரிடும்மகுடமணிந்து அரியணையில் வெகு ஆடம்பரமாக அவன் வீற்றிருந்தான்.

ஆனால் ரபீ ஆமிரோ கந்தை ஆடை யணிந்தவராக, தம்முடைய இடது கரத்திலே சின்னஞ்சிறு கேடயம் ஒன்றைப் பிடித்தவராக அவ்வழகிய அவையினுள் புகுந்தார். அவருடைய எளிய கோலத்திற்கு ஏற்றாற்போல, அவர் ஏறிவந்த குதிரையும் சிறியதாக இருந்தது.

என்றபோதிலும் அவர், பளபளக்கும் பட்டுக் கம்பளங்களைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் அவற்றின்மீதே தம்முடைய குதிரையை விட்டுச்சென்றார். மெத்தென்ற அப் பட்டுக் கம்பளங்களின் பரப்பிலே அக் குதிரையின் தூசுபிடித்த முரட்டுக் குளம்புகள் அழுத்திக் கறைபடுத்தியதை அவர் கவனித்ததாகத் தெரியவில்லை. பாரசீகப் பெருந் தளபதி அமர்ந்திருந்த சிம்மாசனத்தை நோக்கி அம் மிருகத்தைச் செலுத்தினார். அதன் அருகே வந்தபோது, சடாரெனக் குதிரையிலிருந்து இறங்கினார் ராபீ. பின்னர் அதைப் பக்கத்திலிருந்த கம்பம் ஒன்றில் கட்டினார். அடுத்து எவ்விதப் பரபரப்பும் இல்லாமல் தமது தலையில் கவசமும் கையில் ஆயுதமும் இருந்த நிலையில் ருஸ்தூம் பால் நடக்கலுற்றார்.

அதைக் கண்ட பாரசீக அதிகாரிகளுக்கு ஆத்திரம் வந்தது. தங்களுடைய மகாத் தளபதியின் சமூகத்திலே எதிரித் தூதுவர் தலையில் கவசமும் கையில் ஆயுதமுமாகச் செல்வதை அவர்கள் விரும்பவில்லை, அவையொழுங்கிற்கு அப்பாற்பட்ட செயலெனக் கருதி அதை ஆட்சேபித்தனர்.

"தளபதியார் முன்னிலையில் செல்லும் நீர் மரியாதைக்காக உம் தலையிலிருக்கும் கவசத்தை

# அமெரிக்காவில் இனவேற்றுமை!

1964 குடியுரிமைச் சட்டப்படி, பொது இடங்களில் எல்லாம், இன, மத, தேசிய வேறுபாடுகள் பாராட்டக் கூடாது; யாரையும் தனியாக ஒதுக்கக் கூடாது.

கடந்த காலத்தில் பொது இடங்களில் இந்தியர்கள், மற்ற வெளிநாட்டவர்கள் இன வேற்றுமைக்குள்ளானது உண்டு. மீண்டும் இதுபோல அறவே நடக்காது என்று சொல்ல முடியாது; ஆனால் நாளுக்கு நாள் இது குறைந்து வருகிறது இது போன்ற வேற்றுமைகள் பாராட்டக் கூடாதென்று தற்போது சட்டப்படி தடுக்கப்பட்டுள்ளது இந்தத் தடைகள் நீதி மன்றங்களிலும் நிலை நிறுத்தப்பட்டுள்ளன. அமெரிக்கா நெடுகிலும் எப்போதுமே இந்தியர்கள் எங்கு வேண்டுமானாலும் செல்லாம்; அவர்களுக்கு எதிரான இன வேற்றுமை நிகழ்ச்சிகள் எப்போதுமே அபூர்வம். இப்போது அப்படி நடப்பது அரிதிலும் அரிது என்றே சொல்லலாம்.

அமெரிக்க நீக்ரோ அல்லது வேறு யாருக்கும் ஹோட்டல், சிற்றுண்டிச்சாலை அல்லது பொது இடங்களில் அனுமதி மறுக்கப்பட்டால், சட்டப்படி அவர் வழக்குத் தொடரலாம். அல்லது அவர் அட்டர்னி ஜெனரலிடம் முறையிடலாம்; அவர் வேற்றுமை காட்டக் கூடாது என்று நீதிமன்ற உத்தரவு பெற முயல்வார்.

**ஆதாரம்: அமெரிக்கன் ரிப்போர்ட்டர்.**

---

*யாவது கழற்றிவிடும்!" என்று வற்புறுத்தினார்கள்.*

*அந்த வற்புறுத்தலுக்கு வளைந்து கொடுப்பதாக இல்லை ராபீ. தம்மை இடைமறித்த அதிகாரிகளிடம் மிக அழுத்தமாகச் சொன்னார்:*

*"உங்கள் வேண்டுகோளின் படியே நான் இங்கு வந்திருக்கிறேன். அன்றி, நானாக உங்களிடம் வரவில்லை. என் வருகை உங்களுக்குப் பிடிக்காவிட்டால், சொல்லுங்கள், இதோ வந்த வழியே செல்கிறேன்."*

*திரும்புவதற்குக் காலெடுத்து வைத்தார் ராபீ.*

*அவையில் சலனம் ஏற்பட்டது. விவகாரம் வளரு முன் தளபதி ருஸ்தூம் தலையிட்டான்.*

*"அவர் விருப்பம்போல் வரட்டும்! இடைமறிக்கவேண்டாம்."*

*அதன்பேரில், தமது வலது கரம் பற்றியிருந்த கூரிய ஈட்டியைக் கம்பளங்களின் மீது ஊன்றியவராக முன் நடந்து சென்றார் ராபீ ஆமிர்.*

*"வாரும்! இங்கு நீர் எந்த நோக்கமுடன் வந்தீர்?" என்று அவரை வினவினான், பாரசீகத்தின் புகழ்மிக்கத் தளபதி.*

அதற்கு வெகு அமைதியான மறுமொழி ராபீயிடமிருந்து வந்தது—

''மனிதர்களால் அடிமைப் படுத்தப்பட்டிருக்கும் மக்களில், ஆண்டவன் விரும்புகிறவர்களை அவனுடைய அடியார்களாக்குவதற்கும், இம்மையின் குறுகிய வட்டத்திலிருந்து மறுமையின் எல்லையில்லா விரி பரப்பிற்கு உரியவர்களாக ஆக்குவதற்கும் பிற மதங்களின் கொடுமைகளிலிருந்து விடுவித்த அம் மக்களை இஸ்லாமிய நெறியின்பால் சேர்ப்பதற்கும் நாங்கள் அல்லாஹ்விஞல் அனுப்பப்பட்டிருக்கிறோம்.''

அவ்வழகிய பீடிகையுடன் தொடர்ந்த உரையாடலின் போது, பாரசீகர்களை சமாதான முறையில் இஸ்லாத்தின்பால் அழைத்தார் ராபீ. அவ்வழைப் பேற்கப்படாமல் போக, அவர்களை முஸ்லிம்களுக்கு 'ஜிஸ்யா' வரி செலுத்தி வரும்படி கேட்டார். அதற்கும் சாதகமான மறுமொழி ருஸ்தூமின் அவையில் கிடைக்காத நிலையில் அங்கிருந்து திரும்பிச் சென்ருர் ராபி.

அவரையடுத்து வேறு சில முஸ்லிம் தூதுவர்களும் பாரசீகப் படை முகாமுக்கு வந்தனர். அவர்களுடைய கோரிக்கைகளுக்கும் இணங்க மறுத்துவிட்டனர் பாரசீகர்கள். அத்துடன் நில்லாமல் அவர்கள் தங்கள் எல்லையிலிருந்தே பேசாது திரும்பிப் போய்விடும்படி முஸ்லிம்களுக்குத் தூது அனுப்பினர்.

முடிவாக, முகீரா ஷுஆபா என்பார் தளபதியார் ஸஅதின் கட்டளைப்படி அந்தப் பாரசீகர்களிடம் தூதுவராகச் சென்ருர்.

அவரைத் திக்பிரமை அடையச் செய்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்தான் ருஸ்தூம். வழக்கம்போல அவனுடைய அவை பொன்னும் மணியுமாக, பட்டும் பகட்டுமாக, ஒரே அதிகார ஆணவக் காட்சியாக விளங்கியது.

தங்களின் செல்வ பலத்தையும் அதிகார வலிமையையும் தங்களிடம் வரப்போகும் முஸ்லிம் தூதுவருக்கு உணர்த்தி. அதன்மூலம் முஸ்லிம் படைத் தலைவர்களை அங்கிருந்து வெருண்டு செல்லும்படி செய்யலாம் என்று நினைத்தனர் ருஸ்தூமின் அவையினர்.

அவர்களின் அலங்காரக் கூடாரத்தை நெருங்கியபோது, தம்முடைய குதிரையிலிருந்து கீழே குதித்தார் முகீரா. பின்னர் அதன் கடிவாளத்தைப் பற்றியவராக ஆத்தான மண்டப வாயில்வரை அதை நடத்திச் சென்ருர். அங்கே கொட்டார முகப்பில் இருந்த ஒரு பெரிய சார்பணையில் குதிரையின் கடிவாளக் கயிற்றை வெகு அலட்சியமாக வீசியெறிந்துவிட்டு, மண்டபத்தில் நுழைந்தார்.

அதன் எதிர்க்கோடியிலிருந்த சிம்மாசனத்தின் மீது சிங்காரமாக வீற்றிருந்தான் ருஸ்தூம். மண்டபமெங்கும் ஆடம்பர அலங்காரப் பொருள்களும் சோடனைகளும்தான். எல்லாம் ஒழுங்கான வரிசையில் முறையாக வைக்கப்பட்டிருந்தன.

அவற்றிற்கு முற்றிலும் மாருக இருந்தது. முகீராவின் உடையும் உடுப்பும், ஒட்டக ரோமத்தால் தயாரிக்கப்பட்ட சாமானிய கயிறென்றை அவர் தமது அடிவயிற்றைச் சுற்றிக் கட்டியிருந்தார். அதுவே அவரது இடுப்

புப் பட்டையாக விளங்கியது. அந்த அரைஞாணிலிருந்துதொங்கிக்கொண்டிருந்த வாட்பட்டையோ... கந்தைத் துணியால் உறைபோல் சுற்றப்பட்டிருந்தது. ஆனபோதிலும், தம்முடைய மிகவும் எளிமையான கோலத்தைக்குறித்துக் கொஞ்சமும் அஞ்சவில்லை முகீரா. தம்மைச் சுற்றிலும் காணப்பட்ட இடம்பக் காட்சிகளையெல்லாம் ஒரு பொருட்டாக மதியாமல் நெடுகே விரைந்து சென்றார். அடக்கத்தின் உருவாக இருந்த அவரது முகத்தில் தன்மானத்தின் கம்பீரம் துலங்கியது.

மெய்காப்பாளர் எவருமின்றி தன்னந்தனியே அங்கு வந்திருந்த அவர், மளமளவென்று நடந்தவராக நேரே ருஸ்தூமின் சிம்மாதனம் சென்றார். அதன் மீது மிகச் சர்வ சாதாரணமான முறையில் ஏறியமர்ந்துகொண்டார்.

அவையிலிருந்தோர் பலர் ஆச்சரியத்தால் திடுக்குற்றனர், ஒரு சிலர் மலைத்துப்போயினர். மற்றும் சிலர் வெகுண்டெழுந்தனர். முகத்தில் அசூசையும் வெறுப்பும் படர அப்பால் நகர்ந்தான் ருஸ்தூம். அவனுடைய கண்களில் கனல் பாய்ந்தது.

அவனருகே நின்றுகொண்டிருந்த காவல் வீரர்கள் முகீராவிடம் தங்கள் தளபதியாருடன் அவர் சரிசமமாக அமர்ந்தது பற்றி வெகு சூடாக ஆட்சேபித்தனர்.

அவர்களைக் கடுமையாகக் கண்டித்தார் முகீரா.

"ஒருவன் மட்டும் வணக்கத்திற்குரியவனேபோன்று உயர்ந்த சிம்மாதனத்தில் வீற்றிருக்க ஏனையோரெல்லாம் சிரங்குனிந்தவர்களாக் அண்டை அயலில் தாழக் குந்திக்கொண்டிருக்க வேண்டுமென்பது எங்களுக்குள்ளே வழக்கமில்லை.''

வெகு அலட்சியமாக அவர் வார்த்தைகளை விடுத்ததைப் பொருத அவைச் சேவகர்களில் சிலர் அவரைச் சிம்மாசனத்திலிருந்தும் சறுக்கென இழுத்து விட்டனர்.

என்றாலும் முகீரா தம்முடைய நிதானத்தை இழந்துவிடவில்லை. ஆத்மீகப் பண்பு சுடரிடும் கண்களால் அவையைச் சூழ நோக்கியவராக அச்சமின்றி உரைத்தார்:

''பாரசீகத்தின் பிரபுக்களே! உங்களை விவேகமுள்ளவர்என்று நினைத்தேன். ஆனால் நீங்களோ அறிவு குறைந்தவர் என்பதைக் காட்டிவிட்டீர்கள். முஸ்லிம்களாகிய நாங்கள் மனிதர்களைத் தெய்வங்களாக உயர்த்துவதில்லை. எங்களில் மெலியோர்கள் வலியோர்களால் அடக்கியாளப்பட வேண்டுமென்ற கொள்கையை நாங்கள் கொண்டிருக்கவில்லை. இந்தவழியையே நீங்களும் பின்பற்றி வருகிறீர்கள் என்று எண்ணியிருந்தேன். ஆம், உங்களில் வலிமை மிக்கவர்கள் வானளாவ உயர்த்தப்பட்டு, பலவீனர்களால் வணங்கப்பட்டு வருவது எளக்கு இதுவரை தெரியாது. மனிதர்கள் அனைவருமே சகோதரர்கள் — சமத்துவமானவர்கள் என்பதில் உங்களுக்கு நம்பிக்கையில்லை என்பதும் எனக்குத் தெரியாமல் போய்விட்டது. அவ்வாறு தெரிந்திருந்தால், உங்களுடைய அவைக்கு நான் வந்திருக்கவே மாட்டேன்.

இப்போதும்கூட நீங்கள் அழைப்பு அனுப்பியதன்பேரில் அன்றோ நானிங்கு வந்தேன்?

என்னை இவ்வாறு நீங்கள் நடத்துவது முறைதானா? உங்களுக்கு ஒன்றைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்: இவ்விதத் தவறான முறைகளால் நீங்கள் உங்கள் பெருநாட்டைக் காப்பாற்றிவிட முடியாது. வலியோரிடையே கொந்தளிக்கும் அதிருப்தியும் அவர்களுடைய உள்ளங்களில் கொதிக்கும் அமைதியின்மையும் என்றாவது ஒருநாள் உங்கள்மீது பொங்கி விழுந்து, உங்களை வீழ்த்திவிடும்.''

முஸ்லிம் தூதுவரின் துணிவான பேச்சு அவையினரை அயர்த்திவிட்டது. அவர்கள் நினைத்தது ஒன்று, இப்போது நடந்தது வேறொன்றாகவல்லவோ இருந்தது?

''உமக்கான இருக்கையை ஏற்கனவே முறையாக அமைக்காமல் போனது பணியாட்களின் தவறுதான். அதைப்பற்றி நீர் குறைபட்டுக்கொள்வதும் நியாயமே''—ஒருவாறு நிலைமையைச் சமாளிக்க முயன்றான் ருஸ்தூம்.

பின்னர் அவன், தன் முன் நின்ற முஸ்லிம் தூதுவரின் அம்புறுக் கூட்டிலிருந்து சடாரென ஒரு அம்பை உருவினான்.

''இச் சிறு அம்பைக்கொண்டு உம்மால் என்ன சாதிக்க முடியும்?'' எனப் பரிகாசமாகக் கேட்டான். அவனது வாய் ஏளனச் சிரிப்பொன்றை உமிழ்ந்தது.

''தீப்பொறி பார்ப்பதற்கு என்னவோ அற்பமாகத்தான் தோற்றுகிறது. ஆனால் எதையுமே பொசுக்கிவிடும் தணலின் தன்மை அதற்கு உண்டென்பதை உம்மால் மறுக்க முடியுமா?''—முகீரா நறுக்கெனக் கேட்டார்.

அதைக் கேட்டு வாயடைத்துப் போனான் ருஸ்தூம். அத்தனை பேர்களுக்கு முன்னிலையில் கேட்ட அந்தக் கேள்வி அவனுக்கு எத்துணை அவமானமாக இருந்தது! அதை நினைக்க அவன் உள்ளம் குன்றியது.

''அது சரி, உங்கள் வாள் ஏன் இவ்வளவு பழையதாக இருக்கிறது?'' —எவ்வாறாவது முஸ்லிம் தூதரை இழிவுபடுத்த விரும்பினான் ருஸ்தூம்.

ஆனால் அதற்கு முகீரா சுடச்சுட பதில் சொன்னார்:

''நீர் பார்ப்பது என் வாளின் உறை. அது வேண்டுமானால் பழையதாகஇருக்கலாம். ஆனால் அதற்குள்ளே இருக்கும் வாளின் கூர்மையைப் பற்றி நீர் ஐயம் கொள்ள வேண்டாம்!''

தூதுவரைச் சாதுரியமாக அவமானப்படுத்தும் முயற்சியில படு தோல்வியடைந்த ருஸ்தூம் மெல்ல அவர் தன்னவைக்கு வந்த நோக்கம் பற்றிப் பேசத் துவங்கினான்.

முகீராவும் முறைப்படி அதை எடுத்துக் கூறினார். சாந்தமான குரலிலே, பாரசீகர்களை இஸ்லாத்தில் சேரும்படி அழைத்தார். அவ்வுண்மை மார்க்கத்தின் சிறப்புகளைஎடுத்துரைத்து, முஸ்லிம்களாவதால் அப் பாரசீகர்களுக்கு ஏற்படக்கூடிய நலன்களைப் பற்றியும் விளக்கினார்.

''அதை நாங்கள் ஒருபோதும் ஏற்கப் போவதில்லை'' என்றான் ருஸ்தூம்.

''அப்படியானால் நீங்கள் எங்களுக்கு ஜிஸ்யா வரி செலுத்த வேண்டும்'' என்று கூறிய முகீரா அதன் சாதகங்களை எடுத்து

ரைத்து, அது முஸ்லிம்களுடன் சமாதானமாக வாழ வழி செய்யும்'' என்றார்.

''போதும் உம்முடைய போதனை! நாகரிகமிக்க எங்களுக்குக் காட்டரபிதானா புத்தி சொல்லவேண்டும்?'' —கர்வம் தலைக்கேறியவனாகக் கூறினான் ருஸ்தூம்.

''நம்மில் எவர் உயர்ந்தவர் என்பதைக் களத்தில் பார்த்துக் கொள்வோம். நான் வருகிறேன்'' வீரமுடன் கூறினார், சமாதான வழியொன்றும் காணாத முகீரா.

''இவ்வரபி எவ்வளவு வெளிப்படையாகப் பேசிவிட்டான்! மறுக்கமுடியாத உண்மைகளை அல்லவா சொல்லிவிட்டான்?'' என அவையில் எவரோ கூறியது முகீராவின் காதுகளில் விழுந்ததோ என்னவோ, விறு விறு என்று நடக்கலானார்.

''பாமர மக்களை நமக்கெதிராகத் தூண்டிவிட்டுச் செல்கிறானே இவன்! அரபியைத் தாழ்வாக மதிப்பவர்கள் உண்மையில் அறிவீனர்கள் தாம்''-வேறு சிலர் மொழிந்தனர்.

அதைக் கேட்ட ருஸ்தூமுக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. படபடக்கும் தனது பெரிய மீசையை முறுக்கிவிட்டான்.

''அந்த அற்பப் பதர்களான அரபியரை என்ன செய்கிறேன், பாருங்கள்! என்னுடைய படை வலிமை இன்னதென அவர்களுக்குக் காட்டுகிறேன். அதற்கு முன் அவர்களில் எவருமே தப்பிச்செல்ல முடியாது. ஆம், அந்த மனிதப் புழுக்களை என் கால்களால் நசுக்கி ஒழிப்பேன்'' என ஆணவமுடன் கொக்கரித்தான்.

''இறைவன் அவ்வாறு நாடவேண்டுமே?'' என்று அவன் அருகில் நின்ற அதிகாரியொருவன் துணிந்து கூறினான். அழிவுக்குமுன் அகந்தை மிகும் என்பதை அவன் உணர்ந்திருந்தான் போலும்!

''அவன் நாடினாலும் சரி, நாடாவிட்டாலும்சரி, அவர்களை நான் அழித்து வருவேன்''— அகங்காரத்தின் உச்சத்திலே நின்றவனாக, தனது நெஞ்சை முன் தள்ளியவாறு சூளுரைத்தான் ருஸ்தூம்.

அவையினர் அப்படியே அஞ்சியொடுங்கி விட்டனர்.

அவ்வார்த்தைகள் அவையிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த முகீராவின் காதுகளில் சென்று எதிரொலித்தன.

சமாதானப் பேச்சு வார்த்தைகள் நிறைவேறாமலே முகீரா திரும்பிவந்ததும், முஸ்லிம்களை அவமதித்து ருஸ்தூம் சூளுரைத்ததும் ஒரு நொடியில் இஸ்லாமியப்படை முகாமெங்கும் பரவின. முஸ்லிம்களின் வீரம் எத்தகையது என்று பாரசீகர்களுக்குக் காட்ட வேண்டும் என்ற உணர்ச்சி எல்லாரிடமும் மேலோங்கியது.

''இனி எந்த வினாடியும் போர் மூளலாம்''-முஸ்லிம் வீரர்கள் ஒருவருக்கொருவர் பரபரப்புடன் பேசிக்கொண்டனர்.

தளபதியார் ஸஅத் தம்முடைய படைத்தலைவர்களையும் மற்றும் இராணுவ அதிகாரிகளையும் கலந்தார். கலீபாவிடமிருந்து அண்மையில் வந்த உத்திரவுகளின்படி படைகள் அணிவகுத்து நிற்பதற்கான ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்ய முடிவு செய்யப்பட்டது. மற்றும் போர் சித்தங்கள் அனைத்தும் சுணக்கமில்லாமல் நடக்க ஆரம்பித்தன. அவை இரவிலும் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன.

ஓடைக்கப்பால் பாளையம் அடித்திருந்த பாரசீகர்களும்

யுத்த சன்னத்தர்களாகிக் கொண்டிருந்தார்கள் என்பதை இருளினூடே ஆங்காங்கு தெரிந்த தீச்சுடர்கள் வெளிப்படுத்தின. குறிப்பாக, ஓடையோரம் அந்தச்சுடர்கள் நெருக்கமாகவும் பிரகாசமாகவும் தெரிந்தன.

'அங்குள்ள கால்வாயை அவர்கள் மேவிக் கொண்டிருக்க வேண்டும்!'- முஸ்லிம் படையினரிடையே அவ்வெண்ணம்தான் ஓடியது.

ஓடையின் இக் கரைக்கு அருகாமையில் அடிக்கப்பட்டிருந்த ஒரு கூடாரத்தில் கன்ஸா என்னும் மூதாட்டியாருக்கு நிலை கொள்ளவில்லை. அரபு நாட்டிலேயே தலை சிறந்த பெண் கவிஞர் அவர். கலீபாவின் வேண்டுகோளினால் உற்சாகம் பெற்றவராக கதிஸிய்யா வந்திருந்தார்.

போர்ச் செய்தி கேட்ட அவர் தம்முடைய நான்கு மைந்தர்களையும் தம்மிடம் அழைத்தார். அன்னையின் காலடியில் வெகு அடக்கமுடன் வந்து அமர்ந்தனர் அவர்கள். பெற்ற பாசம் ததும்பும் விழிகளால் அவர்களைப் பார்த்து அந்தத் தாய் கூறினர்:

"என்னருமை மைந்தர்களே! உங்களைப் பெற்றெடுக்கப் பெரும் வேதனையையும் இன்பமாகக் கொண்டேன். பெருத்த சிரமங்களுக்கிடையே உங்களை வளர்த்து ஆளாக்கினேன். உங்கள் குடும்பத்தின் கவுரவம் குறையும்படி நான் ஒருபோதும் நடந்ததில்லை. உங்கள் கோத்திரத்தாரின் பெயரைக் கேவலப்படுத்துமாறு எதையும் செய்யவில்லை. மேலும் உங்களுடைய தந்தையாரின் கண்ணியத்திற்கு எவ்வித இழுக்கு வரும்படியும் நான் நடக்கவில்லை. இன்னும் சொல்லவேண்டுமானால், உங்கள் தாயாகிய நான் என்னுடைய ஒழுக்கத்தில் ஒரு சிறிதும்கூட மாசில்லாமல்—என் மீது பிறர் கிஞ்சிற்றும் சந்தேகப்படாத வகையில் நடந்து வந்திருக்கிறேன். இல்லையா?..."

"அதற்கென்ன சந்தேகம் அம்மா? உங்களைப் போன்ற ஒரு சிறந்த தாய் எங்களுக்குக் கிடைத்ததும் அல்லாஹ்வின் அருளேயாகும். உங்களுக்காக எதை வேண்டுமானாலும் செய்ய நாங்கள் சித்தமாக இருக்கிறோம்"—அன்பும் ஆர்வமுமிக்கவர்களாக மைந்தர்கள் கூறினர்.

"உங்களைப் பத்துமாதம் சுமந்து பெற்ற தாய் சொன்னதைக்கேட்பீர்கள் அல்லவா?"

"நிச்சயமாக!"

"இதோ கேளுங்கள்: நீங்கள் நால்வரும் இஸ்லாத்தை மகிழ்வுடன் ஏற்றீர்கள். இப்போது பிறந்த நாட்டை விட்டும் வெளிநாடு புறப்பட்டு வந்திருக்கிறீர்கள். ஆகவே நாயனின் மீது ஆணையாக நீங்கள் ஒரே தாய்க்குப் பிறந்தவர்கள்; ஒரே தகப்பனின் புதல்வர்கள் ஆவீர்கள். உங்களுடைய சத்திய மார்க்கத்தின் பாதுகாப்புக்காகச் சண்டையிடுவதின் சிறந்த பலனை எண்ணிப்பாருங்கள். துன்பத்திற்கிடையே பொறுமையைக் கையாளுங்கள் என்று நம் திருமறை கூறுவதை நினைவு கூருங்கள். அழிந்துவிடக்கூடிய இம்மையை விட நிரந்தர சுகந்தரும் மறுமையே மேல் என்பதை உங்களுக்கு நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்... 'முஸ்லிம்களே! நீங்கள் வெற்றியை நாடுவீர்களேயானால், பொறுமையைக் கைக்கொண்டு, விடா முயற்சி செய்யுங்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்!'—இறைவனின் இந்தப் புனிதத் திருவாசகம் என் இதயத்தில் ஒலித்தவாறு இருக்கிறது..."

மாதாவுடைய இதய ஒலியின் இனிய நாதம் மைந்தர்களின் புத்திர வாத்ஸல்யத்தை நெகிழ்வித்தது 'மெல்லிய உணர்வுப் பெருக்குத் தங்கள் நெஞ்சங்களில் சுரக்க, அவள் கூறுவதை அவர்கள் மவுனமாகக்கேட்டிருந்தனர்.

"...நாளைக்காலை... உற்சாகமுடனும் புத்துணர்வோடும் படுக்கையை விட்டு எழுங்கள். ஆண்மை மிக்கவர்களாக சமர் செல்லுங்கள். நீங்கள் பெற்றுள்ள அனுபவம், கொண்டிருக்கும் பலம் ஆகியவற்றைக் கூட்டி, அல்லாஹ்வின் உதவியை நாடியவர்களாக, எதிரிகளைத் தாக்குங்கள். சண்டை மும்முரமாக நடக்கும் இடம் செல்லுங்கள். போரின் செந்நாப் பிழம்பு மிக உயர்ந்து கொழுந்து விட்டெரியும் நேரத்திலே, சண்டையென்னும் பெரிய உலையிலே புகுந்துவிடுங்கள். படையினரின் முகங்கள் வீரக்கனலால் செம்மையேறும் நேரம், பகைவர்களின் தலைவர்களை அண்மிச் செல்லுங்கள். ஆம், எதிரிகளிலே வீரமிக்கவர்களிடமே நீங்கள் பொருதிப் போராட முனையுங்கள், அவசியமானால்,வீரமரணம் அடையத்தயங்காதீர்கள்.இறைவன் உங்களுக்கு இம்மையில் நலமும் மறுமையில் கண்ணியமும் தந்தருள்வான்."

உணர்ச்சியின் உச்சத்திலே நின்று பேசிய தாயின் வீர உள்ளம், புனித மார்க்கத்திற்காகத் தனயர்களையும் தத்தம் செய்யும் மாதாவின் தியாக நெஞ்சம், கன்ஸாவின் மைந்தர்களின் உள்ளங்களை இனம் புரியாத ஒரு புதிய ஆவேசமுடன் துள்ளி எழச் செய்தன. வீரமும் தீரமும் பெருங்கடலின் அலையைப்போல அவர்களது நெஞ்சங்களில் எழுந்து புரண்டன.

"தாயே! உங்கள் விருப்பப்படியே நடப்போம் எங்களை ஈன்ற போதிலும் பெரிதுவக்கச் செய்வோம். இது உறுதி. எங்களுக்காக இறைவனை வேண்டுங்கள்"

என ஏகோபித்த குரலில் அம்மைந்தர்கள் கூறினர்.

"இப்போதுதான் என் பெற்ற மனம் குளிர்ந்தது, என்னருமைச் செல்வர்களே!" என்றார் கன்ஸா.

முன்னிதழின் தொடர் கட்டுரை

கொடுஞ் செயல் புரிந்த அந்த இளைஞன், இப்போது அடியோடு மாறிவிட்டான்! சமுதாயமே மாறிவிட்டது! என்ன மாற்றம்! என்ன புரட்சி!

# பயணத்தின் முடிவு

*"மஹதி"*

மக்கமா நகரிலிருந்து ஆண்டவனின் திருத்தூதர் முஹம்மத் முஸ்தபா (சல்லல்லாஹு அலைஹிவ சல்லம்) அவர்கள், தம்முடைய அருமைத் தோழர் ஹலரத் அபூ பக்ர் (ரலி) அவர்களுடன் அன்று மதீனமா நகருக்கு வருகை தரப்போகிறார்கள். அவர்களை வரவேற்கவே நகரம் திருவிழாக் கோலம் பூண்டிருக்கிறது. ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் அளவிலா மகிழ்ச்சியோடு அதிகாலையிலேயே எழுந்து நீராடி, நறுமணங்கள்பூசி, நல்லாடை அணிந்து வரவேற்கப் போகிறார்கள் என்று அறிந்தான்.

சாலையின் இருமருங்கிலும் மக்கள் அணி அணியாகத் திரண்டனர்.

பெண்களும், குழந்தைகளும் பறை முழக்கிக் கொண்டு மகிழ்ச்சி பொங்க வரவேற்புப் பண்களை அதி உற்சாகத்தோடு பாடினர். முதலில் தரிசனம் பெறும் நோக்கத்தோடு மக்கள் இடித்துத் தள்ளிக் கொண்டு உள்ளே சென்றனர்.

அண்ணல் அவர்களும், அபூ பக்ர் அவர்களும் வந்தார்கள். அவர்களுக்குப்பின் முஸ்லிம்களும் திரளாக வந்தார்கள்.

'அல்லாஹு அக்பர்' எனும் பேரொலி வான்முட்ட எழுந்தது.

இருபுறமும் இருந்த மரங்கள் இலைகளை ஆட்டி அண்ணல் அவர்களை வரவேற்றன. பறவைகள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தன. தென்றல் அண்ணல் அவர்களின் அடிகளை முத்தமிட்டுச் சென்றது.

மக்கள் ஆரவாரம் பெருகிற்று. குழந்தைகள் துள்ளிக்கொண்டு இங்குமங்கும் ஓடினர். பெண்கள் வேகமாகப் பறை முழக்கி உரக்கப் பாடினர். எங்கும் ஒரே குதூகலம் மதீனமா நகரம் அத்தகைய விழாக்கோலத்தை அதற்கு முன் எக்காலத்திலும் கொண்டதில்லை.

திருநபியின் ஊர்வலம் 'மதீனா'வின் தெருக்களில் நுழைந்தது.

"எங்கள் வீட்டுக்கு வந்து தங்கவேண்டும்." என்று அனைவரும் வருந்தி வருந்தி அழைத்தனர்.

செல்வந்தரோ, நம் வீட்டில் தான் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தங்குவார்கள் என்று நினைத்தார்கள்.

# சர். சையிதின் பதில்!

ஒரு முறை அலிகர் பல்கலைக் கழகத்தை நிறுவிய சர் சையித் அஹ்மத்கான் ரயில் ஒன்றைப் பிடித்து பெட்டிக்குள் ஏறினார்.

ஏறியவரை எல்லோரும் ஏறிட்டுப் பார்த்தார்கள், எல்லோருடைய பார்வையிலும் வெறுப்பு குமிழியிட்டுக்கொண்டிருந்தது. 'சௌகரியமாய் உட்கார்ந்துகொண்டு போகலாம் என்று எண்ணினோம். இந்த மனிதன் வேறு வந்து தொலைத்தானே' என்று அவர்களுக்கு வருத்தம்.

சர் சையித் அமைதியாய்ப் போய் ஆங்கிருந்த இருக்கையில் அமர்ந்தார்:

''நகரும், நான் ஒரு பாரிஸ்டராக்கும்'' என்றார் அங்கிருந்த கோட்டும் சூட்டும் போட்டுக்கொண்டிருந்த ஒரு கனவான்.

சர் சையித் இந்தப் பக்கம் நகர்ந்து உட்கார்ந்தார்:

''அப்படிப் போய் உட்காரும் ஐயா, என்னை யார் என்று எண்ணிக்கொண்டீர், நானும் ஒரு பாரிஸ்டர்தான்'' என்றான் மற்றொரு மனிதன்.

சர் சையித் அமைதியாக, ''நான் ஒன்றும் உங்களுக்குக் குறைந்தவனல்லன். நீங்கள் பாரிஸ்டர் என்றால் நான் பாரிஸ்டருக்கு அப்பன் தெரியுமா?'' என்றார்.

''என்ன சொல்கிறீர், என்ன சொல்கிறீர்?'' என்று பாய்ந்தனர் அந்த இரு பாரிஸ்டர்களும்.

''நான் பாரிஸ்டருக்கு அப்பன் என்கிறேன். என் மகன் சையித் மஹ்மூத் ஒரு பாரிஸ்டர்.''

நூல்: படியுங்கள்! சிரியுங்கள்!!
ஆசிரியர்: அப்துற்-றஹீம்

---

''நான் ஏறியுள்ள ஒட்டகம் எவர் வீட்டுக்கு முன் தங்குகிறதோ அவர் வீட்டிலேயே தங்குவேன்'' என்று திருவாய் மலர்ந்தருளினார் பெருமானார்.

ஹலரத் அபூ அய்யூப் அன்சாரி (ரலி) அவர்கள் ஏழை. அண்ணலாரின் ஒட்டகம் அவர் வீட்டுக்கு முன்பே நின்றது. படுத்தும்கொண்டது.

'ஹோ' எனும் பேரொலி எழுந்தது! ஏழை மக்கள் ஆனந்தக் கண்ணீர் வடித்தனர். தங்கள் தலைப் பாகைகளைக் கழற்றி தடிகளில் கட்டி செடிகளைப் போல் ஆட்டி ஆரவாரம் செய்தனர். ஓர் ஏழை வீட்டில் பெருமானார் தங்கப்போவது குறித்து அவர்களுக்கு மட்டிலா மகிழ்ச்சி.

கூட்டத்தை இடித்துத் தள்ளிக்கொண்டு நமது கதாநாயகனாகிய இளைஞன், ஓடிவந்தான். அவன் முன்னேற முடியாது திணறினான் கூட்டம் அவ்வளவு நெருக்கமாயிருந்தது,

''அடே இப்னு ஹம்பல்!' என்று இடி குரலில் அழைத்து மற்றொர் இளைஞன், அவன கையைப் பிடித்து நிறுத்தினான்.

திரும்பிப்பார்த்தான் நமது கதாநாயகனாகிய இப்னு ஹம்பல் தன் ஆப்த நண்பன் அங்கு நின்று கொண்டிருப்பதைக் கண்டான். மகிழ்ச்சி பொங்க அவனை ஆரத்தழுவினான்.

''தந்தையுடனும், சாச்சாவுடனும் ஷாம் நாட்டுக்குப் போயி

ருந்தாயே! எப்போது வந்தாய்! உன் தந்தையும் சச்சாவும் எங்கே?'' என்ருன் அவன் நண்பன்.

அக்கேள்விக்கு விடையளிக்க விரும்பாத ஹுபல், அவனை உதறித்தள்ளிவிட்டு ஓடினன்.

''நில்! எங்கே ஓடுகிருய்?'' என்று தடுத்து நிறுத்திஞன் மற்ருேர் ஆஜானுபாகுவான இளைஞன், அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்ததும் அதிர்ச்சியடைந்தான் ஹுபல். அவன், தன் அண்ணன் என்பதை அறிந்து கொண்டதும் அவன் முகம் வியர்த்தது.

''எப்போது வந்தாய்? தந்தையும் சச்சாவும் எங்கே?' என்ற அடுத்த கேள்வியை வீசினன் அண்ணன்.

''இருவரும் இறந்து விட்டார்கள்!'' என்று வெறுப்போடு கூறினன் ஹுபல்.

''உண்மையைச் சொல்! அவர்கள் எங்கே?''—மீண்டும் கேட்டான் அண்ணன்.

''உயிரோடு இருக்கும்போதே தந்தையை நீ கொன்றவன். நான் இருவரையும் கொன்று விட்டேன். என்னைக் கேள்வி கேட்க நீ யார்?'' நெஞ்சை நிமிர்த்தி நின்று கேட்டான் ஹுபல்.

இருவரும் கைகலக்க இருந்தனர். பெருமானரின் தோழர் ஒருவர் அவர்களை சமீபிக்கவே கூட்டத்தினர் வழிவிட்டனர். அவர்கள் இருவருடனும் உரையாடினர் பெருமானரின் தோழரான அன்சாரி. இருவரும் அமைதியுடன் அவரைப் பின் தொடர்ந்தனர். பின்னர் நபிகள் நாதரின் அறிவுரைகளைக் கேட்டனர்.

ஒருவாரம் கழிந்தது.

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தம்முடைய தோழர்களுடன் பள்ளிவாசலைக் கட்டத் தொடங்கியிருந்தார்கள் அவ்வேலையில் இப்னுஹுபலும் அவன் அண்ணனும் மும்முரமாகப் பங்கெடுத்துக் கொண்டிருந்தனர் இருவரும இபபோது முஸ்லிம்கள ஆகியிருந்தனர் இப்னு ஹுபல் தன் பெயரை இப்னு ஜுபைர் என்று மாற்றிக் கொணடான். அண்ணன் அப்துல்லாஹ் என்று பெயர் வைத்துக் கொண்டான்.

தம்பி, அண்ணனைப் பார்த்துக் கேட்பான்: ''அண்ணு! இனி உங்கள் திட்டம் என்ன?'' அண்ணன் அபதுல்லாஹ் கூறினன்: 'என் மனைவியர் முஸ்லிம்கள் ஆக மறுக்கின்றனர். அவர்களை விலக்கிவிடப் போகிறேன். தாய்மார் அனைவரும் ஏற்கனவே முஸ்லிம்களாகி விட்டதாக அறிகிறேன். மக்காவுக்குச் சென்று தந்தையின் சொத்தில் பகுதியை அவர்களுக்குப் பிரித்துக் கொடுத்துவிட்டுப் பகுதியை மக்காவிலிருந்து வந்துள்ள முஸ்லிம்களுக்கு விநியோகித்து விடப் போகிறேன்.

''ஹும்! இனிதான் நீ இவையெல்லாம் செய்யப் போகிருயாக்கும்!'' என்ருன் தம்பி. ''நான் ஒரு ஒட்டகத்தை முதல் நாளே அறுத்து முஸ்லிம் அகதிகளுக்கு விருந்து வைத்து விட்டேன். ஒரு ஒட்டகத்தையும் பகுதிப் பணத்தையும் மற்ருெரு முஸ்லிம் அகதிக்குத் தானமாக வழங்கிவிட்டேன் மூன்ருவது ஒட்டகத்தையும் மீதிப் பணத்தையும் ரசூல்லாஹ்விடம் சமர்ப்பித்து விட்டேன். அவர் அதைப் பங்கிட்டு ஏழைகளுக்கு விநியோகித்து விட்டார்.'' என்ருன்.

"உனக்காக ஒன்றும் வைத்துக்கொள்ள வில்லையா! இன்னும் உனக்குக் கலியாணம் ஆகவில்லையே!" என்று கேட்டான் அண்ணன்.

"எனக்கு அல்லாஹ்வின் அருளும், ஆண்டவனின் திருத்தூதருடைய ஆசியும் இருக்கின்றன அவை போதும்" என்ருன்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த நவ்முஸ்லிமாகிய தம்பியின் நண்பன் "நான் உங்கள் சிறிய தந்தையின் மகளை அடிமைவியாபாரியிடமிருந்து விலைக்கு வாங்கி விடுதலை அளித்துவிடப் போகிறேன்." என்ருன்.

அப்போது ஏற்கனவே முஸ்லிமாகியிருந்த அந்த அடிமை வியாபாரி அங்கு வந்தார். "அந்தப் பெண்ணுக்கு விலைகொடுக்க வேண்டாம். நான் எல்லா அடிமைகளையும் விடுதலை செய்துவிட்டேன்" என்ருர்.

மூவரும் மகிழ்ச்சியடைந்தனர். அருகில் நின்றிருந்த மதீனுவாசிகளில் ஒருவர் கூறினுர்:

"யாஅல்லாஹ்! என்ன அற்புதம் நிகழ்ந்து விட்டது! நான் காண்பது நனவா? கனவா?

தீயோர் திருந்திவிட்டனர்.

திருடர் திருட்டை விட்டுவிட்டனர்.

குடிகாரர் குடியை மறந்துவிட்டனர்.

கொலைஞர், தவ்பாச் செய்து
ஈகையாளர் ஆகிவிட்டனர்.

கஞ்சர்கள், கொடைவள்ளல்கள் ஆகிவிட்டனர்.

ரசூலுல்லாஹ்வின் காலடிகளில் தங்கள் செல்வங்களைக் கொண்டுவந்து கொட்டுகின்றனர்,

கொடுமையாளர், தங்கள் இதயங்களில் ஆண்டவனின் அருள்ஒளியை ஏற்றிக் கொண்டனர்,

அல்ஹம்துலில்லாஹ்!
அல்ஹம்துலில்லாஹ்" என்ருர்.

அன்று மாலை.

நமது கதாநாயகனுகிய இளைஞன் இப்னு ஜுபைருக்கும் ஓர் அழகிய முஸ்லிம் பெண்ணுக்கும் ரசூலுல்லாஹ் அவர்கள் முன்னிலையில் நிக்காஹ் மிக எளிய முறையில் நடைபெற்றது.

அன்று இரவு முழுதும் ஜுபைர் தஹஜ்ஜுத் தொழுது கொண்டிருந்தான். கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. கீழ் வருமாறு அல்லாஹ்விடம் துஆச் செய்து கொண்டிருந்தான்.

"பேரன்புடையோனே! பேரருளாளனே! என் பாவங்களை மன்னித்தருள்; எனக்கு நல் வழி காட்டு; என மனைவியையும் நல் வழியில் நடத்து. உன் திருத்தூதரின் தொண்டுக்கு எங்களை ஆளாக்கி விட்டுவிடு. அதுவே போதும்,"




## 5. மன்னனின் மனக் குழப்பம்!

ராடரிக் மன்னனுக்குத் திகைப்பையும் குழப்பத்தையும் தந்த அந்த நிருபம் கஸ்டைல் புரட்சித் தலைவனான பலாஜியஸ் இடமிருந்து வந்திருந்தது!

இக்காலத்திய ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகிய இருநாடுகளும் ஒன்று சேர்ந்த ஐபீரியத் தீபகற்பம் என்னும் நிலப்பரப்பே அப்போது அந்தலூசியா அல்லது ஸ்பெயின் என்று அழைக்கப்பட்டது.

பிரன்னீஸ் என்னும் மலைத் தொடர் ஒன்றினால் அது பிரான்சு நாட்டிலிருந்து பிரிக்கப்பட்டுள்ளது. இருநூறு மைல் நீளமுள்ள அந்த ஒரு பகுதி மட்டுமே ஸ்பெயினுக்கு நிலத்தின் மீது இருக்கும் எல்லை. மற்றுமுள்ள பகுதிகள் அனைத்தும் நான்கு புறமும் கடல்களினால் சூழப் பெற்றுள்ளன. நாட்டின் வடகரையை ஒட்டியுள்ள கடலுக்கு பிஸ்கே வளைகுடா என்று பெயர்.

தென்னாட்டின் செல்வம் கொழிக்கும் சம வெளிப் பிரதேசம் போலல்லாது ஸ்பெயினின் வடபகுதி முழுதும் மிக உயரமான மலைப் பிரதேசங்கள். அவற்றுள் முக்கியமாகக் குறிப்பிடத் தகுந்தவை, கலீஷியா, அஸ்தூரியாஸ், கேன்டாப்ரியா, நவார், ஆரகன், லியான், கஸ்டைல் ஆகிய மாகாணங்கள் இஸ்லாமிய ஸ்பெயினின் பிற்கால வரலாற்றிலே அதிக முக்கியத்துவம் வகிக்கும் இம்மாநிலங்களிலே வாழ்ந்த மக்கள் உடல் வலிமையில் தன்னிகரற்றவர்கள்; சுதந்திரப் பிரியர்கள். தென்னாட்டினரின் சுகபோகம் நிறைந்த சோம்பல் வாழ்வையும் அதன் விளைவாக மக்களின் மத்தியிலே பரவி விட்டிருந்த ஒழுக்கக் கேடுகளையும் அவர்கள் உளமாற வெறுத்தனர். கொடுங்கோல

ஞன ராடரிக் மன்னனின் பிரதிநிதிகளாக இருந்த நிலப்பிரபுக்களுக்குக் கட்டுப்பட மறுத்து புரட்சி செய்து, சுய ஆட்சி நிறுவிக்கொள்ள முயன்றனர். அத்தகைய புரட்சியாளர்களுள் முக்கியமானவன் கஸ்டைல் மாகாணத்தைச் சேர்ந்த பலாஜியஸ்.

ராடரிக்கின் ஆணை அங்கு செல்லாது போய் விட்டதைத் தன் பிரதிநிதிகளின் மூலம் அறிந்த ராடரிக், புரட்சியை ஒடுக்குவதற்காக நாட்டின் வடக்குப் பிராந்தியம் சென்றிருந்தான். மனிதர்களால் எளிதில் கடக்க முடியாத செங்குத்தான மலைகளும் பயங்கரமான பள்ளத்தாக்குகளும், புகமுடியாத பெருங்காடுகளும் நிறைந்த அப்பிரதேசத்தில் புரட்சியாளர்களைத் தேடிப் பிடித்து அழிப்பது அவ்வளவு எளிதாக இல்லை, மன்னனுக்கு. திடீர் திடீர் என எதிர்பாராத வேளைகளில் எங்கிருந்தெல்லாமோ வந்து மன்னனுடைய படைகளைத் தாக்கிப் பெரும் சேதத்தை விளைவித்து விட்டு அவர்களிடமிருந்து கிடைக்கக்கூடிய ஆயுதங்களையும் உணவுப்பொருள்களையும் சூறையாடிக் கொண்டு சென்று மறைந்து விடுவார்கள் பலாஜியஸின் புரட்சி வீரர்கள். அவன் ஆயுட்காலமெல்லாம் அங்கு கழித்தாலும் எதிர்ப்பாளர்களை முழுமையாக அடக்கி நசுக்க முடியாது என்னும் உண்மையை அவன் உணரத் தொடங்கிய நேரத்தில்தான் அரபியரின் நடமாட்டம் பற்றிய செய்திகள் தியோடமிர் இடமிருந்து தொடர்ந்து கிடைக்கத் தொடங்கின. தோல்வியோடு திரும்ப வேண்டிய நிலைமையில், நாட்டை அன்னியரின் ஆக்கிரமிப்பில் இருந்து காப்பதற்காக கௌரவமாகத் திரும்பிச் செல்லக் கூடிய சந்தர்ப்பத்தை முஸ்லிம்கள் அவனுக்கு அளித்தனர்.

அத்தகைய பெருவீரனான பலாஜியஸ் உடைய ஒத்துழைப்பைக் கோரும்படியாகத்தான் பெரிய பாதிரியார் அவனுக்குத் கட்டளையிட்டு விட்டுச் சென்றிருந்தார்.

தன்னுடைய எதிரியிடமே உதவிகோரும் அவமானச் செய்கையைக் கடைசிவரை தவிர்த்து விட எண்ணியிருந்த ராடரிக், பலாஜியஸ் தானாகவே முன்வந்து எழுதிய நிருபத்தைத் திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்துக் குழம்பினான்.

பலாஜியஸுக்கு வேறு உள்நோக்கம் ஏதேனும் இருக்குமா? நிக்கோலாஸ் பாதிரியாரும் பலாஜியஸும் சேர்ந்து தனக்கெதிராகத் திட்டம் ஏதும் வகுத்திருப்பார்களோ என்றெல்லாம் சந்தேகப்பட்டான் ராடரிக். பலாஜியஸின் வீரம், வலிமை, நாட்டுப்பற்று இவற்றைப் பற்றியெல்லாம் மன்னனிடமே அளவு கடந்து புகழ்ந்துரைத்தாரல்லவா நிக்கோலாஸ்.

பலாஜியஸின் கடிதத்தில் பின்வருமாறு கண்டிருந்தது:

"எத்தனை ஆண்டுகள் முயன்றாலும் எங்களுடைய சுதந்திர வேட்கையை அடக்கவோ, எங்களை அடிமைப் படுத்தவோ உம்மால் முடியாது என்பதை நீர் இதுவரை அறிந்து கொண்டிருக்கலாம். பனிபடர்ந்த நார்டிக் பிரதேசங்களிலிருந்து படையெடுத்து வந்து ரோமானியர்களையே முறியடித்து வெற்றிக் கொடி நாட்டிய நம் முன்னோர்களான வாண்டல் இனத்தவரின் உடலுறுதியும் உள வலிமையும் வடககத்தியரான எங்களிடம் தான் இப்போதும் குடி கொண்டிருக்கின்றன. சமவெளிகளில் தங்கி மித மிஞ்சிய சுகபோகங்களில் ஈடுபட்டு வீரத்தையும் வலி

# வளர்ச்சியின் வேகம்!

"பண வீக்கம், விலைவாசி உயர்வு இரண்டும் வளர்ச்சியின் அறிகுறிகள்" என்று நமது திட்டக் கமிஷனிலுள்ள நிபுணர்களும் மந்திரிகளும் இடைவிடாமல் நமக்கு ஆறுதல் சொல்லி வருகிறார்கள். ஆனால் பாகிஸ்தானில் இம்மாதிரி பணவீக்கமோ, விலைவாசி உயர்வோ ஏற்படவில்லை; நாணய மதிப்பைக் குறைக்கவேண்டிய அவசியமும் ஏற்படவில்லை. பாகிஸ்தானில் 1958 — 57ல் விலைவாசி குறியீட்டு எண் 104.6ஆக இருந்தது; 1965—66ல் இது 106.5 ஆகத்தான் உயர்ந்தது. அதாவது 2 சத விகிதம் உயர்ந்தது. இந்தியாவில் இதே கால அளவில் விலைவாசி சுமார் 40 சதவிகிதம் உயர்ந்தது.

இந்தியாவின் நிலைமைக்கும் பாகிஸ்தானின் நிலைமைக்கும் இவ்வாறு வித்தியாசம் இருப்பதற்கு ஒரே ஒரு காரணம்தான். அங்கு பொருளாதாரத்தை உருவாக்கும்போது, தொழில்களில் அனுபவமுள்ளவர்களிடம் யோசனை கேட்கிறார்கள். இங்கு தொழில் அனுபவம் சிறிதும் இல்லாதவர்களாகப் பொறுக்கியெடுத்து "நிபுணர்களிடமும்" அரசியல் வாதிகளிடமும், காரியத்தை நடத்துவதைவிட காரியத்தைத் தாமதப் படுத்துவதிலேயே திறமை பெற்றுள்ள அதிகார வர்க்கத்திடமும் யோசனை கேட்டோம். இதுதான் இரண்டு நாடுகளின் திட்டத்துக்கும் உள்ள வித்தியாசம்.

"கணக்கன்" (தினமணி)

---

மையையும் இழந்துவிட்டீர்கள், தென்னாட்டவரான நீங்கள். ஒழுக்கமின்மையால் உளுத்துப் புரையோடிவிட்டன உங்கள் உடல்களும், உள்ளங்களும். இந்த நிலைமையில் பலம் வாய்ந்த ஓர் அன்னிய இனத்தவரின் தாக்குதலை எப்படிச் சமாளித்து நாட்டைக் காப்பாற்றப் போகிறீர்கள் என்று எங்களுக்குப் புரியவில்லை

நமக்குள் எவ்வளவோ வேற்றுமைகளும், பகைமையும் இருந்தாலும் கூட, நாடு அரபியர் வசப்படாமல் காப்பாற்ற உதவுவது எங்கள் கடமை என்று நம்புகிறோம். நம் அனைவருக்கும் பொது எதிரியான அன்னியரை விரட்டிய பின் நமக்கிடையே உள்ள விவகாரங்களை பேச்சுவார்த்தைகளின் மூலம் சமாதானமாகவோ சண்டையிட்டோ தீர்த்துக் கொள்வோம். உமக்கு தற்போது இருக்கும் சங்கடமான நிலையைப் பயன் படுத்திக் கொண்டு வடநாட்டில் தாலதோ ஆட்சிக்குள்ள சிறு ஆதிக்கத்தையும் அழித்துவிட்டு பூரண சுதந்திரப் பிரகடனம் செய்வதும், மேலும் உமது ஆதிக்கத்துக் குட்பட்ட

வேறு பிரதேசங்களையும் கூடக் கவர்ந்து கொள்வதும் எங்களுக்கு எளிது. எனினும். அப்படியெல்லாம் செய்து அதன் மூலம் உங்களுடைய சக்தியை மேலும் குன்றவைத்து, அன்னியர் நமது தந்தை நாட்டில் காலூன்றிக் கொள்ள உதவுவது அறிவுடைமை அல்ல. கயமை என்று நான் நம்புகிறேன்.

எனவே எங்களுடைய உதவியைத் தயங்காமல் ஏற்றுக் கொள்வீர் என்று நம்புகிறேன். இந்நிருபத்தை எழுதியனுப்பிய பின் உம்முடைய மறுமொழிக்குக் காத்திராமலே இன்னும் இரண்டு மூன்று தினங்களில் பொறுக்கியெடுத்த ஐயாயிரம் வீரர்களுடன் நான் தெற்கு நோக்கிப் புறப்படுவேன்.

இதை முடிக்கும் தருணத்தில் நாட்டின் வட பகுதிகளில் சுற்றுப்பிரயாணம் செய்து மக்களைத் தட்டி எழுப்பிக் கொண்டிருக்கும் பெரிய பாதிரியார் நிக்கோலஸ் அவர்களின் அவசரத் திருமுகம் ஒன்றும் எனக்குக் கிடைத்துள்ளது "உன் ஒத்துழைப்பைக் கோரி ராடரிக மன்னனிடம் இருந்து உனக்கு நிருபம் வந்திருக்கலாம். அதை ஏற்றுக் கொண்டு உடனே புறப்படுவாய் என்று நம்புகிறேன்!" என்பதாக அவர் வரைந்திருக்கிறார்.

நான் மேலே எழுதியுள்ளபடி உடனே புறப்பட முடிவு செய்து விட்டேன். உம்முடைய பதிலுக்காகக் காத்து கொண்டிருக்கப் போவதில்லை.

வரும் வழியில் பரிசுத்த தந்தை நிக்கோலாஸ் அவர்களையும் பார்த்து விட்டுவருகிறேன்.

என்ன காரணத்திற்காக வேனும் நீர் என் ஒத்துழைப்பை ஏற்க மறுத்துவிட்டால் அதற்காக நான் என்னுடைய கடமையைச் செய்யாமல், கைகளைக் கட்டிக் கொண்டு இருந்துவிடப் போவதில்லை.

அத்தகைய நிலைமையில், எங்களுடைய உதவியும் இன்றி உம்முடைய கூலிப்பட்டாளம் எதிரிகளிடம் சிக்கி சின்னா பின்னப் பட்டுச் சிதறியபின் நாட்டைக் காப்பாற்றும் பணியை நாங்களே மேற்கொள்ளுவோம்.

ஐயாயிரம் பேர் கொண்ட என் படை எம்மாத்திரம் என்று இறுமந்து இருந்து விடாதீர். என்னுடைய ஐயாயிரம் வீரர்கள் உம்முடைய வீரர்கள் ஐம்பதாயிரம் பேருக்குச் சமம் என்பதை மறந்துவிட வேண்டாம். இந்த உண்மையை, தேரிலே கண்டு அனுபவித்த உமக்கு நான் சொல்லித்தான் தெரியவேண்டும் என்பதில்லை!''

இத்தகைய கடுமையான, குத்தலான வாசகங்கள் நிறைந்த கடிதத்தைப் படித்த ராடரிக் மன்னனுக்கு அளவு கடந்த ஆத்திரம் ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை!

ஆனால். அக்கடிதத்தில் கண்டிருந்த வாசகங்கள் அனைத்தும் உண்மையானவையே என்று அவனுடைய உள் மனம் அவனுக்கு இடித்துரைத்தது!

அப்படியானால், பலாஜியஸ் தன் வீரர்களுடன் தாலதோவை நெருங்கி வந்து கொண்டிருக்க வேண்டும். அவன் வருகையின் நோக்கம் அவனுக்கே பலாஜியஸின் கடிதத்தைப் பெற்ற பிறகு தான் தெரியும். அப்படியிருக்க தன் ஒற்றர்கள் பலாஜியஸின் படை வருவது குறித்து அது வரை தனக்குத் தெரிவிக்காதது பற்றி கடுங் குரோதம் கொண்டான் மன்னன்.

பெரிய பாதிரியார் கடைசியாக அவனிடம் பேசிவிட்டுப் போனதிலிருந்து தோன்றி, பலாஜியஸின் கடிதத்தைப் படிந்த பின் முதிர்ந்த சந்தேகம் அடிக்கடி அவனை அலைக்கழித்துக் கொண்டிருந்தது

அப்போதிருந்த மாறுபட்ட நிலைமையில், பெரிய பாதிரியாரும் கூடத் தன்னை அரச பதவிக்குத் தகுதியற்றவன் என்று நினைப்பதாக அவனுக்குத் தோன்றியது. எனவே தனக்கு பதிலாக பலாஜியஸை மன்னனாக்க நிக்கோலாஸ் திட்டம் வகுத்துக் கொண்டிருக்கிறாரோ என்னவோ என்று அவன் அஞ்சினான்.

எது எப்படியிருப்பினும் பலாஜியஸ் தன்னுடைய படையில் வந்து சேர்ந்து கொள்வதைத் தன்னால் தடைசெய்ய இயலாது; அப்படிச் செய்ய முயன்றால் அதனால் ஏற்படும் விளைவுகள் மேலும் விபரீதமாக இருக்கும் என்று இறுதியாகத் தேர்ந்த மன்னன், பலாஜியஸின் தேசபக்தியைப் பெரிதும் பாராட்டுவதாகவும், அவனுடைய ஒத்துழைப்பை வரவேற்பதாகவும் நிருபம் எழுதி அனுப்பிய பின் புறப்படுவதற்கான ஆயத்தங்களைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தான்.

தாலதோ நகரமும் அதன் சுற்றுப்புறங்களும் அமர்க்களப்

பட்டன். டியூக், கவுண்ட் என்று அழைக்கப்பட்ட மாகாணங்களின் அதிபதிகளும் அவர்களை விடப் பதவியில் குறைந்த நிலப் பிரபுக்களும் படை வீரர்களைச் சேர்த்துக் கொண்டு தலை நகருக்கு வந்து சேர்ந்திருந்தார்கள். மறுநாள் காலையில் பொழுது விடிந்ததும் படை புறப்படுவதாக இருந்தது.

அன்று இரவு வந்தது. கடைசி நேர ஆயத்தங்களில் ஈடுபட்டிருந்த மன்னனைத் தனிமையில் காண இளையராணி எஜிலோனா விரும்புவதாக பணிப் பெண் வந்து கூறினாள்.

ராணி எஜிலோனா ராடரிக் மன்னனின் மூன்றாவது மனைவி. ஸ்பெயின் தேசத்திலேயே அவளுக்கு நிகரான அழகி எவளுமில்லை எனப் பெயர் பெற்றிருந்த எழிலரசி. இருபது வயதே நிறைந்தவளான அவளை அதற்குச் சில மாதங்களுக்கு முன்பாகத்தான் அவன் மணந்திருந்தான். அவளுடைய இளமைக்

இயற்றியவர்: மௌலவி பாஜில் கவிஞர் அல்ஹாஜ்
G. M. S. ஸிராஜ் பாக்கவி



9—8—66ல் காலஞ் சென்ற

## அல்லாமா அமானி ஹஜ்ரத்

ஆன்றநலம் கொண்டொளிர்ந்த ஹஜ்ரத் 'அமானி' யெனும்
சான்றோனே! நின்னுடைய சால்பிற்கும் ஈடுண்டோ?
தேன்போன்று பேசிடுவாய் திகைப்போடு பிறர்நோக்க
ஊன்றியநம் மார்க்கத்தின் உண்மையினைச் சொல்வாயே!

கும் அழகுக்கும் அடிமைப்பட்ட மன்னனால் தன்னுடைய இளைய ராணியின் வேண்டுகோளைத் தட்டமுடியவில்லை. மற்ற ராணிகள் சொல்லி அனுப்பி இருந்தால் அவனுக்கிருந்த நெருக்கடியில் நேரமில்லை என்று பதில் அனுப்பி இருப்பான்.

அவள் விருப்பப்படியே அவளைச் சந்திப்பதாகச் சொல்லியனுப்பிய பின் ராணி எஜிலோனு தன்னிடம் பேசவிரும்புவது என்னவாக இருக்கும் என்று மன்னன் சிந்திக்கத் தொடங்கினான். ஒரு வேளை தன்னையும் போர்க்களத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டுமென அவள் கோருவாளோ என்று நினைத்தான்.

இறுதியாக அவள் அவனைக் காணவந்தபோது அவளுடைய வதனத்திலே நிலவிய கோபத்தையும் குரோதத்தையும் கண்டு அவன் திகைத்தான். வந்ததும் வராததுமாக அவள் வீசிய கேள்விக் கணைகளைச் செவி மடுத்ததும் திடுக்கிட்டான்!

(தொடரும்)

---

பன்மொழிகள் கற்றிருந்தாய்; பண்புநலம் பெற்றிருந்தாய்!
இன்மொழியால் எங்களுடை இதயத்தில் வீற்றிருந்தாய்!
உன்மொழியில் கட்டுண்டே ஒப்பற்ற இன்புற்றோம்!
அன்புடையோய் நீயுந்தான் அகன்றனையே என்செய்வோம்!

ஆயிரமாம் சீடர்களை அறிஞர்களாய் உருவாக்கிப்
போயினையே! அந்தோ! புலம்பித் துடிக்கின்றோம்?
தாயின்நல் நலங்காட்டித் தண்ணளியால் ஆட்கொண்ட
தூயமனம் கொண்டஉனைத் துறந்ததுவும் உண்மையதோ?

உருதென்னும் மொழியில்நீ உருவாக்கித் தந்திட்ட
நறுமணஞ்சேர் *பூங்காவாய் நபிவரலாற் றுக்கிணையாய்
ஒருநூல்தான் இங்கே உதித்ததுவோ? உன் அறிவுப்
பெருமையினை எண்ண எண்ணப் பெருங்கலக்கம்
தோன்றிடுதே!

அல்லாஹ்வின் அருளால்நின் ஆன்மாதான் சாந்திபெற
உள்ளத்தால் நாங்கள் ஒன்றிநின்று வேண்டுகின்றோம்
வல்லவனே! நின்பிரிவாம் வருத்தத்தில் ஆழ்ந்துள்ள
எலலோர்க்கும் இஃதன்றி ஏதுரைக்க வல்லேன்யான்!

* அல்லாமா அமானி மர்ஹூம் அவர்கள் இயற்றிய நூலின் பெயர் "குல்ஷனே ஸீரத்" என்பதாகும் 2000 ஈரடிகளைக் கொண்ட நாயக வரலாற்றுப் பெருநூல்.




## 23. எவ்வுயிர்க்கும் அன்பாயிரு!

“பசியால் சாகும் வரை ஒரு பூனையைக் கட்டிப் போட்டிருந்தவள் (நரகில்) தண்டிக்கப்பட்டாள். அவள் அதற்கு ஆகாரம் அளிக்கவுமில்லை; அது பூமியிலுள்ள புழுப் பூச்சிகளைத் தின்னும்படி அவிழ்த்துவிடவுமில்லை.”

**அறிவித்தவர்: இப்னு உமறும் அபூஹுறைறுவும்**

அபூ ஹுறைறு அறிவித்ததாவது:- “ஒரு வேசி மன்னிக்கப்பட்டாள்; இளைத்துக்கொண்டு தாகத்தால் மரணத்தறுவாயில் ஒரு கிணற்றின் ஓரத்தில் நின்ற ஒரு நாயின் அருகே அவள் நடந்து சென்றுள்; அப்பொழுது அவள் தனது (மோசா) காலுறையைக் கழற்றி, அதனைத் தனது முக்காட்டுத் துணியிற் பிணித்து அதற்(கு அருத்துவதற்)காகத் தண்ணீர் இறைத்தாள். அதனல் அவள் (பாவங்களினின்று) மன்னிக்கப்பட்டாள்” என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அருளினர். ‘விலங்குகளுக்கு உதவினுல் எங்களுக்குப் பலனுண்டா?’ என்று (தோழர்களால்) வினவப்பட்டது. ‘ஈரலுள்ள எல்லாப் பிராணிகள் விஷயத்திலும் பலன் உண்டு’ என (ப்பெருமானுர்) விடையளித்தனர்.”

**ஆதாரம்: புகாரீ, முஸ்லிம்.**

“ஒரு முஸ்லிம் ஒரு செடியை நாட்டி, அல்லது ஒரு வித்தை விதைத்து, அதன் பலனை ஒரு மனிதன் அல்லது பட்சி அல்லது நாற்காற் பிராணி உண்டால், அது அவனுக்குத் தர்மம் ஆகாதிருப்பதில்லை.”

**அறிவித்தவர் :- அனஸ். ஆதாரம் : புகாரீ, முஸ்லிம்.**

உயிரினங்களுக்கு, அவை எத்துணை அற்பமானவையாயினும், நலம் புரிந்து, அவற்றின் தேவையை நிறைவேற்றுவதற்கு உயர்ந்த சம்மானமும் ஆத்மிக நன்மையும் உளன என்று இந்த ஹதீது நமக்கு அறிவுறுத்துகின்றது.

நமக்குப் பகுத்தறிவு உண்டு; விலங்கினத்திற்கு அஃதில்லை; ஆயினும் நமது உடல்நலத்திற்கு நமக்கு ஆகாரம்வேண்டப்படுவது போலவே அவைகளின் உடலுக்கும் ஆகாரம் தேவைப்படுகின்றது. மானிடர்க்குத் தீங்கிழைக்கும்விலங்குகளின்விஷயம் இவ்விதிக்கு விலக்கானது; பாம்பு, புலி போன்றவற்றைக் கொல்லுவதற்குச் சம்மானம் உண்டு.

மூலம்: மிஷ்காத், ஆசிரியர்: மௌலானா பஜ்லுல் கரீம்

தமிழ்: ம. கா. மு. காதிர் முஹ்யித்தீன் மரைக்காயர்.



# திருமணம்

## ஹஸனல் ஆரிப்—கமருன்னிஸா

நாகை எம். எஸ் எம். சுல்த்தான் மரைக்காயர் அவர்களின் புதல்வர் ஹஸனல் ஆரிப் அவர்களுக்கும், காரைக்கால் ஏ. எம். சாலிஹ் மரைக்காயர் அவர்களின் புதல்வி கமருன்னிஸாவுக்கும், 10—8—66ல் மிகச் சிறப்பாகத் திருமணம் நிகழ்ந்தேறியது.

## அப்துல் மஜீது—ஜுபைதா பீவி

கொடிக்கால் பாளையம் இ. நா. மு. அப்துல் மஜீது அவர்களின் புதல்வியும், அல்ஹாஜ் ஓ. முஹம்மது யூசுப் அவர்களின் தங்கையுமான ஜுபைதா பீவிக்கும், மர்ஹூம் ச. சா. முஹம்மது யூசுப் அவர்களின் புதல்வரும், முஹம்மது இஸ்மாயில் சகோதரருமான அப்துல் மஜீதுக்கும் 28—8—66ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது

## அப்துல் ரஷீது—ஜைபுன்னிஸா

இராஜகிரி, மர்ஹூம் ஒஞ்சி அப்துல் ஹமீது ராவுத்தரின் புதல்வர் ஓ. ஏ அப்துல் ரஷீதுக்கும், மேற்படியூர் அய்யா என்கிற பி. கே. அப்துல் ஹமீது ராவுத்தரின் புதல்வி ஜைபுன்னிஸா பேகத்துக்கும் 15—8—66ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

## ஹஸீனா பேகம்—கலிக்குஜ்ஜமான்

சென்னை புரசவாக்கம் அல்ஹாஜ் ஹாஜி கே. ஐ. ஜக்கரியா அவர்களின் புதல்வி ஹஸீனா பேகத்துக்கும், திருபுவனம் கே. ஏ. ஜக்கரியா அவர்களின் புதல்வர் கலிக்குஜ்ஜமானுக்கும் 18—8—66ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

## அப்துல் கரீம்—ஹலீமா நாச்சியார்

கூத்தாநல்லூர் பெரியதெரு ச. மு. அப்துல் ரஷீது அவர்களின் தம்பி அப்துல் கரீமுக்கும், ச. மு. கமாலுத்தீன் அவர்களின் புதல்வி ஹலீமா நாச்சியாவுக்கும் 10—8—66ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

**மணமக்கள் நீடூழி வாழ்க!**

# திருக்குர்ஆன் தெளிவுரை

## 95. உலக வாழ்வின் இலட்சியம்!

இவ்வுலக வாழ்க்கை ஒரு வீண் விளையாட்டும், வேடிக்கையுமன்றி வேறில்லை. மறுமை வாழ்வுதான் நிச்சயமாக நிலையான வாழ்வாகும். 29 : 64.

இந்த உலக வாழ்வை நிலையானது என்றே பெரும்பான்மை மக்கள் நினைத்துச் செயலாற்றுகின்றனர். பிறப்பதற்கு முன்பே இறப்பு நிச்சயம் என்பது யாவருக்கும் உறுதியாகத்தெரிந்துதான் இருக்கிறது. ஆனால் இறப்பைப் பற்றி நினைப்பவர்கள் நூற்றுக்கு எத்தனை பேர்? இறப்பு நிச்சயம் என்று நம்புகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவர்களின் நடவடிக்கைகள் அதற்கு இசைவாகவா இருக்கின்றன?

இருப்பது போதாதென்று இன்னமும் சேர்க்கிறார்கள். பணம் சேர்ப்பதில் போட்டிப் போடுகிறார்கள்; சேமித்து வைக்கிறார்கள். அவற்றை நாம் அனுபவிப்பது. சிறிது காலந்தான் என்பது அவர்களுக்குத் தெரியும். எனினும், செலவு செய்ய அஞ்சுகிறார்கள். செலவு செய்யாமல் சேமித்து வைத்துவிட்டு மறைந்து போனவர்களின் கதையை மறந்து விடுகின்றனர்.

இவ்வுலக வாழ்வு நிலையானதல்ல; விளையாட்டுப் போன்றது. மரணம் எப்பொழுது வரும், எந்த இடத்தில் வரும் என்பதை நாம் அறியமுடியாது. மனிதன் தனது விஞ்ஞான அறிவைக் கொண்டு மகத்தான சாதனைகளையெல்லாம் செய்து காட்டிவிட்டான். சந்திர மண்டலத்தில் மனிதன் இறங்கப் போகிற காலம் வருகிறது என்கிறார்கள். உடலைவிட்டுப் பிரிந்த உயிர் திரும்பி வந்து, மீண்டும் சில நிமிட நேரம் அல்லது சில மணி நேரம் மனிதனை வாழச் செய்கிறது விஞ்ஞானம். ஆனால் அது நாட்கணக்கில், மாதக்கணக்கில் மனிதனை வாழவைக்க முடிகிறதில்லை; அந்த நிலை வரப்போவதுமில்லை. மனிதனுக்கு நிரந்தரமாக உயிர் கொடுக்க முடியும் என்று எந்த விஞ்ஞானியும் அறைகூவ முடியுமா?

மறுமை வாழ்வு நிசசயமில்லை என்று நினைப்பவர்கள்கூட, இவ்வுலக வாழ்வு நிலையல்ல என்பதை மறுப்பதில்லை.

இவ்வுலக வாழ்வு எப்படி நிலையானதல்லவோ அப்படித்தான் மறுவுலக வாழ்வும் நிலையானதென்று முஸ்லிம்கள் நம்புகின்றனர். இந்த நம்பிக்கையின் அடிப்படையில்தான் மனிதன் தனது சகோதர மனிதனுக்கு நன்மைகள் செய்ய வேண்டுமென்று இஸ்லாம் அறைகூவுகின்றது.

# வினா ? விடை



★ இந்திய முஸ்லிம்களின் எதிர்காலத் தலைமை?

★ இன்றைய இஸ்லாமிய இளைஞர்களும் சமூகத் தொண்டும்.

★ வரும் தேர்தலில் முஸ்லிம் லீக் வேட்பாளர்கள் வெற்றி பெறுவார்களா?

★ பெரியாரின் இலட்சியம் என்ன?

ஏ. முஹம்மது இப்ருஹீம்,
பார்த்திபனூர்.

கே: இந்திய முஸ்லிம்கள் அரசியலில் தலையிடாமல் மத விஷயங்களில் மட்டும் கவனம் செலுத்தினால் முன்னேறலாம் என்று நினைக்கிறேன்?

ப: அரசியல் தலையீடு இல்லாது மத விஷயங்களை மட்டும் கவனிக்க ஒரு மந்திரி சபையே பொறுப்பேற்றுள்ளது, காங்கிரஸ் பற்றுள்ள முஸ்லிம்களே முஸ்லிம் வக்பு போர்டில் உறுப்பினர்களாக விளங்குகின்றனர். உங்கள் யோசனை நடைமுறைக்கு ஒவ்வாது; நாட்டு நிலைக்கும் பொருந்தாது.

எம். சுல்தான், சென்னை-16.

கே: பெரியார் ராமசாமியின் இலட்சியம் என்ன?

ப: இன ஒழிப்பும், பணம் சேர்த்தலும். இனவொழிப்பில் ஓரளவு வெற்றி! பணம் சேர்ப்பதில் பூரண வெற்றி!

கே. காதர் பாட்சா,
திருநெல்வேலி.

கே: வரும் பொதுத் தேர்தலில், தி. மு. க-சுதந்திரா-முஸ்லிம் லீக்-கம்யூனிஸ்ட்-தமிழரசு ஆகிய கட்சிகள் பதவி ஆசைகளை விட்டுக் கொடுத்துச் கூட்டணி அமைக்க முடியுமா?

ப: ஒவ்வொரு கட்சியினரும் தங்கள் ஆசைகளைக் கட்டுப்படுத்தினால்தான் கூட்டணி சேரும் வாய்ப்பு உண்டு. சட்ட சபைப் பதவி எனக்கு, உனக்கு என்று அடித்துக் கொண்டால் இன்னும் 5 வருடத்துக்கு ஆட்சியைக் காங்கிரஸ் கட்சியிடம் விட்டு வைக்க வேண்டியதுதான்! காங்கிரஸ் கட்சியின் அடுத்த ஐந்தாண்டுத் திட்டங்கள்தான் நாட்டைக் காப்பாற்ற வேண்டும்.

ஏ. ஷுக்கூர், சென்னை.

கே: இன்றைய இஸ்லாமிய இளைஞர்களின் சமூக சேவையுணர்வைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ப: ஆயிரத்தில் ஒருவருக்கு அந்த உணர்வு இருக்கிறது. அவர்களும் செயல்பட முடியதா நிலை. நடுத்தர மக்கள் அல்லது ஏழைகளுக்கே சமுதாய உணர்வும் தொண்டுள்ளமும் இருக்கின்றன. அவர்கள் குடும்பத்தைக் காப்பாற்றுவதா, தேசத் தொண்டு, சமூகத் தொண்டு புரிவதா என்ற நிலை. செல்வந்தர் வீட்டுப் பிள்ளைகளுக்கு இன்பக் களியாட்டங்களில், உல்லாசப் பொழுது போக்குகளில் நாட்டம். பெற்றோர்களாவது சமூக சேவையில் ஊக்குவிக்க வேண்டும். அதுவுமில்லை. ஒரு பெருந்தனக்காரருக்கு மூன்று படித்த பிள்ளைகள் இருந்தால் அவர்களில் ஒருவரையாவது பொதுக் காரியங்களில் ஈடுபடுத்தினால் நல்லது. அவரும் சுயநலமின்றிச் செயலாற்ற வேண்டும். பண்டைய முஸ்லிம்களின் சமூக, தேசப்பற்றையும் இன்றைய முஸ்லிம்களின் மனப் போக்கையும் நோக்கினால், வேதனையாக இருக்கிறது. வாழ்க்கையின் இலட்சியம், சம்பாதிப்பது, செலவு செய்வது! அவ்வளவுதான். வருங்கால முஸ்லிம்கள், நாட்டு மக்கள் வாழ்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்ற எண்ணமேயில்லை.

எம். தஸ்தகீர், தஞ்சாவூர்.

கே: வருகிற பொதுத் தேர்தலில் முஸ்லிம் லீகின் வேட்பாளராக நின்று போட்டியிட விரும்புவோர் பணவசதியுள்ளவர்களாக இருந்தால்தான் வெற்றிபெறுவார்கள் என்று நம்புகிறேன். உங்கள் கருத்து என்ன?

ப: பணக்காரர்கள் இதற்கு முன்வருவதில்லை. பணக்கார இளைஞர்கள் பலர் இப்போது தி. மு. க. வில் இருக்கின்றனர். முஸ்லிம் லீகில் இல்லை. முஸ்லிம் சமூகத்தில் உள்ள செல்வந்தர்களின் புதல்வர்கள் முஸ்லிம் லீகில் முக்கிய பங்கு ஏற்கத் தயங்குகின்றனர். முஸ்லிம் லீகின் தலைவரைப் போலவே, தொண்டர்களும் ஏழைகள், அல்லது நடுத்தர மக்களே! முஸ்லிம்களில் எத்தனையோ பெரிய பணக்காரர்கள் இருக்கின்றனர். அவர்களில் ஒருவர் கூட முஸ்லிம் லீகில் இல்லை. காங்கிரசில் பலர் இருக்கின்றனர். வருங்காலத்தில் காங்கிரஸ் எதிர்க்கட்சிகளின் கூட்டணி பதவிக்கு வந்து, முஸ்லிம்லீகும் அதில் இருந்தால், இஸ்லாமிய செல்வந்தர்கள் பொதுத் தேர்தலில் போட்டியிட வருவார்கள். தி. மு. க. வில் இன்று காணப்படும் பதவிப் போட்டி, வருங்காலத்தில் முஸ்லிம் லீகிலும் வரும்.

மு. முஹம்மது இஸ்மாயில்,
விருதுநகர்.

கே: தேசத் தலைவியும்,

## காலமானார்கள்

எங்களின் அன்புத் தாயார் **பாத்திமா பீபி அம்மாள் அவர்கள்** தமது 72-வது வயதில் 8—8—66 திங்கள் காலை 11-30 மணிக்கு இறைவனடி சேர்ந்து விட்டார்கள். அன்னாரின் ஜனாசா 9—8—66 காலை 7 மணிக்கு நல்லடக்கம் செய்யப்பட்டது. அதுபோது நேரில் வருகை தந்தும் தந்தி தபால் மூலம் அனுதாபம் தெறிவித்த அனைவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன் அன்னாரின் ஆத்மா சாந்தியடைய இறைவனைப் பிரார்த்திக்கின்றோம். தாயாரின் பிரிவால் வருந்தும்,

**என்.என். அப்துல் ரஹிமான், என்.என். அப்துல் வஹாப்,**
**என்.என். அப்துல் கரீம் என்.என். அப்துல் வதூத்.**
மேலத்தெரு. இலுப்பூர், திருச்சி மாவட்டம்.

# கைத்தொழில் பொருள்களினால்

# இன்பமான இல்லங்கள்

உங்கள் வீட்டில் உள்ள கைத்தொழில் பொருள்கள் வசதியின் மற்றும் மகிழ்ச்சியின் சின்னங்களாக விளங்குகின்றன. பல்வேறு பருவ காலங்களுக்கும், குணங்களுக்கும் ஏற்றபடி அமைந்துள்ள இப் பொருள்களில் வேலைத் திறன் பிரதிபலிக்கின்றன. புராதன கலை அழகும், நவீன நாகரீகமும் ஒருங்கே கொண்ட பொருள்கள் இவைகள். சிறப்பாக அச்சடிக்கப்பட்ட திரைச்சீலைகள், கண்ணைப் பறிக்கும் வண்ணங்களிலும், மோஸ்தர்களிலும் உள்ள ஜமுக்காளங்கள், அக்ரோட்டு மர மேஜைகள், நீல நிற மண் பாண்டங்கள், களிமண் பொம்மைகள், நிர்மல் வேலைப்பாடுடன் கொண்ட பொருள்கள், அலங்காரத்திற்கேற்ற தந்தசாமான்கள், இன்னும் எவ்வளவோ, ஒவ்வொன்றும் தனிச்சிறப்பை கொண்டுள்ளன.

## அகில இந்திய கைத்தொழில் போர்டு

DA-66/293

கவிக்குயிலுமான சரோஜினி நாயுடுவின் காலத்தில் அவர் தொடர்பு கொண்ட மற்றப் பெருந்தலைவர்கள் யார்?

ப: கோபால கிருஷ்ண கோகலே, முஹம்மது அலீ ஜின்னா, பிரோஸ்ஷாமேத்தா, ஜயகர், பாலகங்காதர திலகர், புலாபாய் தேசாய் ஆகியோர். இவர்களெல்லாம் அப்போது பிரபலமான பெரிய வழக்கறிஞர்கள். காந்திஜி இந்திய சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடுவதற்கு முன்பு அதில் ஈடுபாடு கொண்டவர்கள். மோதிலால் நேரு போன்றவர்கள் காந்திக்குப் பிறகுதான் தீவிரமாக அரசியலில் இறங்கினர்.

எ. மீரா மொஹிதீன்,
கள்ளக்குறிச்சி.

கே; இந்திய முஸ்லிம்களின் எதிர்காலத் தலைமை முன்போல் உருவாகுமா?

ப: அரசியல் சமுதாயத் தலைமையைத் குறிப்பபிடுகிறீர்கள் என்று நினைக்கிறேன். ஒரு சர். சய்யித் அஹ்மதையோ அல்லது ஜின்னாவையோ காண்பது கஷ்டந்தான். காந்தி, நேருவைப் போன்ற ஒருதலைவர் தோன்று

## தோல் ஆராய்ச்சியில் வெற்றி!

விஞ்ஞானி, திரு. பழ. முத்தையா மத்திய தோல் ஆராய்ச்சி நிலையம், சென்னை-20, அவர்களுக்கு மத்திய அமைச்சரவை தொழில் இலாகாவைச் சேர்ந்த புதிய கண்டுபிடிப்புக்களை ஊக்குவிக்கின்ற நிலையத்தார் ரூபாய் ஆயிரம் பரிசாக அவர்களுடைய "காலணி அடித்தோலின் தண்ணீர் உறிஞ்சும் தன்மையைக் குறைக்கும் முறை" என்னும் புதிய கண்டுபிடிப்புக்காக, தந்து இருக்கின்றார்கள். அவர்கள் ஆறு ஆண்டு காலமாக சென்னை மத்திய தோல் ஆராய்ச்சி நிலையத்தில் ஆயவு நடத்தி வருகின்றார்கள். அவர்கள். அமெரிக்காவும், லண்டனிலும். இந்தியாவிலும் உள்ள பல சங்கங்களில் அங்கத்தினர் ஆவார்கள். அவர்கள் பல ஆராய்ச்சி பேப்பர்களை வெளியிட்டு இருக்கின்றார்கள். காலணிகளை மிகவும் நலன் பயக்கும்விதமாக செய்வது பற்றி ஆய்வு நடத்தி வருகின்றார்கள். வாழ்க, முத்தையா!



வது எப்படி அபூர்வமோ அப்படித்தான், மௌலானு முஹம்மது அலீ, ஜின்னு போன்றவர்கள் மறுபடியும் தோன்றுவது கடினம்.

எஸ். ஷேக்தாவூது, விஜயபுரம்.

கே: ஹிந்து நண்பர்கள் பலர் என்னைக் கேட்கிருர்கள், குர்ஆன் தமிழில் இருக்கிறதா என்று. இருக்கிறது என்று கூற வும் வெட்கமாக இருக்கிறது. இல்லையென்றுகூறவும் வேதனை யாக இருக்கிறது. இதற்கு என்ன செய்வது?

ப: உண்மையில் ஒரு தர்ம சங்கடமான நிலைதான். குறைந்த விலையில் சிறந்த குர் ஆன் எதுவுமே தமிழில், பிறமதத்தினர் பார்த்துத் தெளிவுபெறும்படியாக இல்லை. சிலர் எழுதி வெளியிட்டு வருகின்றனர். ஆனால் முற்றுப் பெறவில்லை. தகுந்த முறையில் திருப்திகரமாக ஒன்று வெளியாகவேண்டும். தமிழ், அரபு, அங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் தேர்ச்சி பெற்றவர்கள் ஐந்து பேர் சேர்ந்து, ஒரு பெரு நிதி திரட்டி, குறைந்த விலையில் இலாப நோக்கு இல்லாமல் குர்ஆனை வெளியிட வேண்டும். ஒரு குர்ஆன் ஐந்து ரூபாய் விலையில் கிடைக்குமாறு மிகக் குறைந்த விலையில் வெளியிட வேண்டும். ஐந்து ரூபாய் விலையில் கிடைத்தால் அயல்மதவாதிகளும் விலைக்கு வாங்குவார்கள்.

என். ஷாஹுல் ஹமீது,
முத்துப்பேட்டை.

கே: கம்யூனிஸ்ட் சீனுவில் முஸ்லிம்களுக்குத் தொழுகை நடத்துகின்ற இமாம் ஒருவரை இடது சாரி கம்யூனிஸ்ட்கள் அவமானப்படுத்தி வெளியேற்றி விட்டதாக ஒரு செய்தி வந்திருக்கிறது. இது உண்மையா?

ப: இருக்கலாம். கம்யூனிஸ்ட்களில் தீவிர வாதிகளான இடது சாரிகள் எந்த மதத்தையும் தாக்குகின்றனர். இஸ்லாம், புத்த மதம், கிறிஸ்துவ மதம் அனைத்தையுமே இவர்கள் கிண்டலும், கேலியும் செய்கிருர்கள். கம்யூனிஸ்ட்கள் மதங்களை மதிக்கும்படியான போதனை அவர்களுக்கு இல்லை, முஸ்லிம்கள் இறைவனைத் தொழுகிருர்கள். சீனக் கம்யூனிஸ்ட்கள் மாசே துங்கையே தெய்வமாகத் தொழுகின்றனர். மனிதனை மனிதன் தொழும் மௌட்டிகக் காலம் திரும்புகிறது. அஞ்ஞான காலம் வருகிறது.

கே. ஜுபைர், ராமநாதபுரம்.

கே: ஒரு கம்பெனி (லிமிடெட்)க்கு கிடைக்கும் இலாபத்தில் சர்க்காருக்குச் சேர வேண்டிய வருமான வரி எவ்வளவு?

ப: வருமானவரி 50 சதவீதம், ஊழியர்களுக்கு போனஸ் 20 சதவீதம் கொடுக்கவேண்டும் என்பது சட்டம்.

Edited & Published by N. B. Rameeza 18, Ramasamy St, Madras-1. Printed by V· Sambandan at Sengunthamithran Press. 33 Armenian St., Madras-1

போன்:
25174

# முயல் ஜோடி

கண் கவர் கைலிகள்

மென்மை மிகு கைக்குட்டைகள்

வெண்மைமிகு வேட்டிகள்

வனப்பு மிகு சேலைகள்

புதுமையான ஸ்லாக்குகள்

வண்ணச் சோளிகள்

உற்பத்தியாளர்கள் விற்பனையாளர்கள்

**A.V. மல்லைய்ய செட்டியார் & சன்**




| | |
|---|---|
| 5, ராமசாமி தெரு,<br>மண்ணடி,<br>சென்னை - 1<br>போன்: 25174 | 275, இராமநாத<br>புரம் ரோடு,<br>கீழவாசல்,<br>மதுரை -9.<br>போன்; 5259 |